# சுதேசமித்திரன்

வாரப் பதிப்பு

6—8—'44
Vol XV. No. 27

PRICE 3 ANNAS.



THE SWADESAMITRAN ILLUSTRATED WEEKLY




IMPORTANT TO MOTHERS
Nº 99
WOODWARD'S CELEBRATED
"GRIPE WATER"
INFANTS PRESERVATIVE
FOR THE DISORDERS OF CHILDREN, VIZ.

சுதேசமித்திரன்
வாரப் பதிப்பு





தாரண ஆடி 22உ (6 - 8 - '44)

# மயக்கம் தெளிய மருந்து



காந்திஜி தெரிவித்திருந்த யோசனைகளுக்கு ஏமரி வர்க்கத்தார் இணக்கம் காட்டியிருந்தால் பிரிட்டன் விரும்பும் சகல விதமான சௌகர்யங்களும் கிடைத்திருக்கும். ஆனால் ஏமெரி தமது பழைய பல்லவியின் உதவி கொண்டே தம்மை மீண்டும் குருடாக்கிக் கொண்டு விட்டார். எனவே இந்தியாவைப் பற்றி எது வந்தாலும் "இல்லை" "முடியாது" என்று சொல்லும் சம்பிரதாயத்தையே இந்த அரிய சந்தர்ப்பத்தில் கூட காமன்ஸ் சபையில் அவர் கையாண்டு விட்டார். கொட்டி அளப்பானேன்? அதிகாரத்தை எந்த நிலையிலும் விடத் தாங்கள் தயாரில்லை என்பதைப் பிரிட்டிஷ்காரர்கள் ஒவ்வொரு சமயத்திலும் தெளிவாக்கி விட்டனர்.

காமன்ஸ் சபையில் ஏமரி பேசியிருப்பதற்கும், பிரபுக்கள் சபையில் மன்ஸ்டர் பிரபு செய்த பிரசங்கத்துக்கும் சாரத்தில் வேற்றுமையில்லை. இருவரும் இந்தியாவில் தகராறு நிலைபெறுவதற்கான "உத்தம கைங்கர்யத்தை"ச் செய்திருக்கிறார்கள். லீகுக்குத் தூபம் போட்டார் மன்ஸ்டர் பிரபு. இதே போல முஸ்லிம் லீகுக்கும்-காங்கிரஸுக்கும் எவ்வித ஒப்பந்தமும் ஏற்படாதவாறு செய்ய ஹிந்து மகாசபையினருக்குக் கோடி காட்டியிருக்கிறார் ஏமரி. இந்தத் தகராறுகள் நீடிக்குமளவும் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் உல்லாஸமாகக் காலந்தள்ளலாமல்லவா? இது தான் அவ்விருவிஷமப் பிரசங்கங்களின் அந்தரங்க நோக்கம்.

தூபம் ஜின்னாவிடம் எதிர் பார்த்தபடி பிரதி பலித்திருப்பதாகவே கொள்ள வேண்டும். சென்ற மாதக் கடைசியில் லாகூரில் நடந்த முஸ்லிம் லீக் கவுன்ஸிலில் அவர் செய்திருக்கும் பிரசங்கத்தைக் கவனித்தால் உண்மை புலப்படும். மகாத்மாவின் சம்மதத்துடன் ராஜாஜி காங்கிரஸ்-லீக் ஒற்றுமைக்காகத் தெரிவித்த திட்டத்துக்கு அவர் தீர்ப்புச் சொல்லிவிட்டார்! அத்திட்டத்தைப் பற்றி ஜனாப் ஜின்னா சொன்னதுதான் முடிவு! ஜனநாயக உணர்ச்சியுடன் ராஜாஜி திட்டத்தை லீக் காரியக் கமிட்டியில் வைப்பதாகப் பசப்பினார்! முதலில் லீக் காரியக் கமிட்டியின் மனோபாவம் இன்னதெனத் தெரிந்துகொள்ள அவர் முற்படவில்லை. "சகலமும் நானே" என்ற ஒரு கேடயத்தை லீகிடமிருந்து அவர் வாங்கிக்கொண்டு விட்டார். வகுப்பு ஒற்றுமையில் நாட்டமுள்ள ஒவ்வொருவரும் ர்ரஜாஜியின் திட்டத்தின் நேர்மையை நன்கறிவர். ஜனாப் ஜின்னா அத்திட்டத்தின் பிரிவுகள் ஒவ்வொன்றாக எடுத்துக் கொண்டு தமது குயுக்தி வாதங்களை அடுக்கியிருக்கிறார். எல்லாவற்றிலும் விசித்திரமான வாதமொன்றையும் அவர் தெரிவித்துள்ளார்! பிரிட்டிஷ் சர்க்கார் அதிகாரத்தை இந்தியர் கைக்கு மாற்றுவதைப் பொறுத்துத்தான் இத்திட்டம் அமுலுக்குவரும் என்று ராஜாஜி தெரிவித்திருப்பது பிசகாம்! அதிகாரம் மாறாதநிலையில் தம் கோரிக்கை எப்படி நிறைவேறுமென்று ஜனாப் ஜின்ன எண்ணுகிறார்? சமரஸத்துக்கு வர இஷ்டமில்லாது பிரிட்டிஷ் சர்க்கார் சொல்லும் நொண்டிச் சாக்குகளுக்கும் ஜனாப் ஜின்னா வகுப்பு சமரஸத்துக்குச் சொல்லும் தடைகளுக்கும் வேற்றுமையில்லை. இருப்பினும் இம்மாத மத்தியில் ஜனாப் ஜின்னாவும்-மகாத்மாவும் சந்திக்கப் போகின்றனர். அச்சந்திப்பிலேனும் ஜனாப் ஜின்னா நாட்டின் க்ஷேமத்தை மனதில்கொண்டு அரிய தருணம் நழுவிப் போகாமல் ஓர் உடம்பாட்டுக்கு வழிகாண வேண்டும். அங்ஙனம் செய்வராயின் அதுவே அதிகாரவர்க்கத்தின் மயக்கத்துக்கு மருந்து.

# மற்ரெரு அதிசய மூலிகை

★

யுத்த காலத்தில் விக்ஞான ஆராய்ச்சித் துறையில் காணும் அதிசயங்கள் பல. இதே போலவே இன்னும் பல்வேறு சாஸ்திரங்களிலும் ஆராய்ச்சிகள் நடக்கின்றன. வைத்தியத் துறையும் இதற்கு விலக்கில்லை. பல மருந்துகள் புதிது புதிதாக வந்து கொண்டிருக்கின்றன. புது புது மாதிரியான நோய்கள் ஏற்பட்டு வரும் இக்காலத்தில் அவற்றிற்கான புதிய நிவாரணிகள் தோன்றுவதும் இயற்கை. சென்ற சில வாரங்களுக்கு முன் வைத்திய ஆராய்ச்சியின் பயனுகக் கண்டு பிடிக்கப்பட்ட "பெனிஸிலின்" பற்றிய விவரமும் அதைக் கண்டு பிடித்த பிரிட்டிஷ் நிபுணர் பற்றிய வரலாறும் படங்களுடன் "மித்திரன்" வாரப் பதிப்பில் தோன்றியதை நேயர்கள் கவனித்திருப்பர். அதே மாதிரி இப்போது ஒரு புதிய மூலிகையைப்பற்றிய தகவல் வெளி வந்துளது. "பெனிஸிலின்" என்ற நவீனமூலிகையைக்கண்டு பிடித்தவர் ஒரு பிரிட்டிஷ் நிபுணர். இதே போல மற்ரெரு அதிசயமான மூலிகையும் கண்டு பிடிக்கப்பட்டிருக்கிறது. அதற்கு "விவிஸிலின்" எனப் பெயர். சில வியாதிகளுக்கு இப்புதிய மூலிகை விசேஷப் பயன் அளிப்பதாகக் கூறப்படுகிறது. ஒரே மாத காலத்தில் இம்மூலிகையைத் தயாரித்து விடலாம். "பெனிஸிலின்" மூலிகையைத் தயாரிக்கும் செலவைக் காட்டிலும் மேற்சொன்ன புதிய மருந்தைத் தயாரிக்கும் செலவு வெகு சொல்பம். இதை உள்ளுக்கும் கொடுக்கலாம்; வெளியே பூசவும் உபயோகப்படுத்தலாம். இந்த மூலிகையைக் கண்டு பிடித்திருப்பவர் ஒரு யூதர். இவர் ஹாம்பர்க்கில் ஸீரம் இன்ஸ்டிடியூட்டை ஸ்தாபித்தவர். டாக்டர் ஹான்ஸ் யுனுக் என்பது அவருடைய பெயர். வயது 47.

ஜெர்மனியில் ஹிட்லர், அதிகாரத்தை ஏற்றுக்கொண்டவுடன் இவர் ஜெர்மனியை விட்டு வெளியேறும்படி நிர்ப்பந்திக்கப்பட்டார். எனவே, இவர் 1935-ம் வருஷத்தில்பிரிட்டன் வந்து சேர்ந்தார். "பெனிஸிலின்" மூலிகையைக் கண்டு பிடித்த புரொபஸர் ப்ளமிங்கின் ஆராய்ச்சியில் டாக்டர் ஈனுக்கும் சிரத்தைகொள்ளத் தலைப்பட்டார். அந்த ஆராய்ச்சியில் இவரும் ஈடுபட்டார்.

பெனிஸிலின் கிடைக்காத சந்தர்ப்பங்களில் நோய்களுக்கு நிவாரணமளிக்க மாற்ருக ஒரு மருந்தைத் தயாரிக்க அவர் முயற்சி செய்தார். மிருக வைத்தியத்துக்குப் புதியதொரு மருந்தைக் கண்டுபிடித்து கால்நடைகளில் உயிர்ச் சேதமேற்படாதபடி தடுத்து அவற்றைப் பாதுகாக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது. எனவே டாக்டர் யுனுக் வெகுவர்கத் தமது ஆராய்ச்சியில் முனைந்தார்.

பார்னெட், வெல்ஹவுஸ் ஆஸ்பத்திரியில் "விவிஸிலின்" சமீபத்தில் பரீட்சித்துப் பார்க்கப்பட்டது. இடைவிடாமல் ரத்தப் பெருக்கெடுத்து அவதிப்பட்ட 9-வயதுச் சிறுவன் ஒருனுக்கு இம்மருந்து கொடுக்கப்பட்டது. குடல் அனுபந்தத்துக்கும் இது உபயோகிக்கப்பட்டது. பரீட்சித்ததில் விசேஷப் பயன் காணவே டாக்டருக்கு ஊக்கம் அதிகரித்தது.

புண்கள் விஷமாக மாறும் போதுகூட "விவிஸிலின்" மருந்து உபயோகப்படுத்தப் பட்டுக் குணம் கண்டிருக்கிறது. வெல்ஹவுஸ் ஆஸ்பத்திரியில் இம்மருந்து தயாரிக்கப்படுகிறது. தன் தேவைக்குப் போதிய அளவில் இதை அங்கு நிர்வாகிகள் சேகரித்து வைத்துக் கொள்கின்றனர்.

"பெனிஸிலின்" போலவன்றி இதை ரஸாயனசாலையில் சில முக்கியமான சீதோஷ்ண நிலைமையிலேயே தயாரிக்கவேண்டும். இம்மருந்து பச்சைவர்ணமுள்ள வில்லைகளாகத் தோற்றமளிக்கும். பெனிஸிலின் வில்லைகள் வெள்ளை நிறத்துடனிருக்கும் என்பது முன்னரே தெரிவிக்கப்பட்டுளது.

"விவிஸிலின் உற்பத்தியின் மூலம் "பெனிஸிலின்" உற்பத்தியும் பெருகுமென்பது டாக்டர்களின் நம்பிக்கை.

டாக்டர் ஈனுக் இன்னும் எவ்வளவோ ஆராய்ச்சிகள் செய்து வருகிருர். "விவிஸிலின்" மூலிகை அவ்வாராய்ச்சிகளில் ஒன்று. இதில் ஈடுபட்ட டாக்டர் ஈனுக்கின் உதவியாளர் ஒருவர் இம்மருந்து ஆராய்ச்சியின்போது ஏதோ ஒருவித நோய் கண்டு இறந்து விட்டார் எனப்படுகிறது.

—::—



காலஞ்சென்ற ஸ்ரீ வி. எஸ். ராமஸ்வாமி சாஸ்திரியாருக்குப் பதிலாக சென்னை மாகாண பத்திரிகை ஆலோசனையாளராக நியமிக்கப்பட்டிருக்கும் ஸ்ரீ டி. எ வி. நாதன் சென்ற வாரம் பதவி ஏற்ருர்.

# ரஷ்யரின் அபார வெற்றி



சோவியத் படைகள் போலந்தின் தலை நகரான வார்ஸாவை நெருங்கி விட்டன. அந்நகரின் சுற்றுப்புறத்தில் தற்போது கடும் போர் நடந்து வருகிறது. விரைவில் அது சோவியத் வசமாகிவிடுமென்பதில் சந்தேகமில்லை. அதை எதிர்பார்த்து நாஸிகள் அந்நகரிலுள்ள கட்டிடங்களைத் தகர்த்து வருகிறார்கள். வடக்கே முன்னேறும் சோவியத் படைகளுக்கும், கிழக்கு பிரஷ்யாவுக்கும் நடுவேயுள்ள தூரம் அதிவேகமாகக் குறைந்து வருகிறது. ஜெர்மனியர் தீவிரமாக எதிர்த்தும் பலிக்கவில்லை. அங்கு லிதுவேனியாவின் தலை நகரான காஞைஸ அவர்கள் காலிசெய்துவிட்டனர். லட்வியா, எஸ்டோனியா ஆகிய நாடுகளில் மிஞ்சியுள்ள ஜெர்மன்படைகளுக்கு ஆபத்து அதிகரித்து வருகிறது. அவர்கள் ஸ்டாலின் கிராட் முறையைப் பின்பற்றி கடைசிவரை அங்கு நின்று போராட வேண்டுமென்பதே ஹிட்லர் கருத்தெனத் தோன்றுகிறது. (அவர் மீது ஜெர்மன் ராணுவத்திற்குள் கொதிப்பு அதிகரித்துவருவதற்கான காரணங்களில் இதுவும் ஒன்று.) எப்படியும் அப்படைகள் இனி தப்ப வேண்டுமானால், பால்டிக் கடல் மூலம் வெளியேறுவதைத் தவிர வேறு வழியில்லை. தெற்கே ருமேனிய அரங்கத்தில் கார்பதியன், மலைப்பகுதியிலும் ரஷ்யத் துருப்புள் தீவிரமாகத் தாக்கி முன்னேறிக் கொண்டிருக்கின்றன.

## கோயபல்ஸ் வெருட்டல்

ரஷ்யரின் அதிவேகமான முன்னேற்றம் கண்டு ஜெர்மனியருக்குள் கலவரம் அதிகரித்து வருகிறது. அவர்களுக்கு ஆறுதல் கூறும் முறையில் கோயபல்ஸ் சமீபத்தில் செய்த பிரசங்கம் ஒன்றில் நேச நாடுகளைப் பழி வாங்க ஏற்பாடு செய்து வருவதாகக் கூறினார். ஜெர்மனியில் பல ரகசிய ஆயுதங்கள் தயாரிக்கப்பட்டு வருவதாகவும், அவற்றில் சிலவற்றைப் பார்த்தபோது தாம் திக்பிரமை யடைந்ததாகவும் குறிப்பிட்டார். எதிரிகள் பறக்கும் குண்டுகளை ஒரே சமயத்தில் பல இடங்களிலிருந்து தென் இங்கிலாந்து மீது பிரயோகித்துக்கொண் டிருக்கின்றனர்.

ரஷ்ய வெற்றியின் எதிரொலிகள் பல. லண்டனிலுள்ள போலிஷ் சர்க்கார் போலிஷ்-ரஷ்ய எல்லைப் பிரச்னையில் முன்பு ரஷ்ய சர்க்கார் சொல்லிய யோசனையை இப்போது ஒப்புக் கொள்ளத் தயாராயிருக்கின்றனர். இதன்படி போலந்தில் அநேகமாக ஒரு பாதி ரஷ்யாவைச் சேர்ந்து விடும். ஆனால் ரஷ்ய சர்க்கார் முன்பே அப் போலிஷ் சர்க்காருடன் உறவை ரத்து செய்து விட்டு, மாஸ்கோவில் ஒரு போலிஷ் கமிட்டியை ஏற்படுத்தி அதனுடன் ஒப்பந்தங்கள் செய்துகொண்டு வருகின்றனர்.

## துருக்கி போரில் இறங்குமா?

துருக்கி ஜெர்மனியுடன் உள்ள உறவை ரத்து செய்துகொண்டு விடுமென எதிர்பார்க்கப்படுகிறது. அங்குள்ள ஜெர்மனியர் வெளியேறத் தயாராகி வருகின்றனராம். துருக்கிக்கு எப்போதுமே நேசக்கட்சியிடம் அனுதாபம் உண்டாயினும், அது இதுவரை பகிரங்கமாக அக்கட்சியில் சேரத்துணியவில்லை. காரணம் ஜெர்மன் தாக்குதலைச் சமாளிக்க துருக்கிக்குப் போதிய பலமில்லாததுதான். ஆனால் தற்போதைய நிலையில் ஜெர்மனி துருக்கியைப் பழி வாங்கக் கிளம்புவது சந்தேகம். ஏனெனில் ஏற்கனவே அது பல போர் முனைகளைச் சமாளித்தாக வேண்டியிருக்கிறது. நேசப் படைகள் துருக்கிப் பிரதேசத்தை உபயோகித்துக்கொள்ள முடியுமாயின், அதன் மூலம் விசேஷமான அனுகூலங்கள் ஏற்படும்.

நார்மண்டிப் போர் முனையில் நேசத்துருப்புகள்விசேஷமாக முன்னேறக்கூடவில்லை. இத்தாலியிலும் நேசப் படைகள் முன்போல் அவ்வளவு எளிதாக முன்னேற முடியவில்லை.

கிழக்குப் போர்முனை சம்பந்தப்பட்டவரை, அமெரிக்க விமானங்கள் மஞ்சூரியாவிலுள்ள சில நகரங்கள் மீது குண்டு வீசியது தான் விசேஷம்.




## 41

# ‘கடல் கோள்’



### வ. வேணுகோபாலன்

நாககுமரனின் வருகையால் நகரத்தில் யாவரும் குதூகலம் அடைந்தார்கள். அவனைக் காண்பதற்கு ஆவல் கொண்டு ஜனங்கள் வீதியில் கூடி நின்றார்கள். அவனுடன் அரசன் வீதிக்குள் புகும்போது இருள் நன்கு சூழ்ந்துவிட்டது. வீதியின் இருபுறமும் விளக்குகள் வரிசையாக ஒளி வீசிக்கொண்டிருந்தன. மிக வேகமாக அரசனின் தேர் வீதியைக் கடந்தது. நானாவித கோஷணையோடு அரசனின்படைகள் பின்னே அணிவகுத்துச் சென்றன. நாககுமரனின் வருகைக்காக நகரை நன்கு அலங்கரிக்குமாறு பண்ணனும் ஏனாதியும் கட்டளையிட்டார்கள். அக்கட்டளையை ஏற்று, அவ்விராப் பொழுதிலும் ஜனங்கள் குதூகலத்தோடு நகரை அலங்கரிப்பதிலே ஈடுபட்டார்கள். நாககுமரன் நகருக்குள் புகுந்ததை ஒரு பெருந் திருவிழாவாகவே கொண்டாடினார்கள்.

**கடல்
கொந்தளிப்பு**

அன்று இரவு நகரில் ஆரவாரம் மிகுந்திருந்தது. நகரில் ஜனங்கள் செய்யும் ஆரவாரத்திற்கும் பேரிரைச்சலுக்கும் மேலாக கடலின் முழக்கம் மிகுதியாக இருந்தது. அதனால் வியப்பும் திகிலும் கொண்டு காரணம் அறியாமல் யாவரும் யோசித்தார்கள். கடலலைகளின் பேரிரைச்சல் அன்று போல் என்றும் கேட்டதில்லையாதலால், யாவருக்கும் அச்சமயம் பிரமிப்பு உண்டாயிற்று. ‘நாககுமரனின் வருகையால் கடல் அதிகமாகக் கொந்தளித்து தன் பெரு மகிழ்ச்சியைத் தெரிவிக்கின்றது’ எனச் சிலர் சமாதான வார்த்தைகளைச் சொல்லிக் கொண்டனர். ஆனால் மிக விரைவில் அவர்களுக்கு உண்மை புலனாயிற்று. கடல் கொந்தளிப்பதன் காரணத்தை அடுத்த சில நாழிகைக்கெல்லாம், அதன் செயலால் அறிந்துகொண்டார்கள்.

**சீர்த்தியின்
பிரேமை**

அரண்மனையில் பொன் மாளிகையில் நாககுமரனுடன் அளவளாவி உபசரிப்பதிலே ஈடுபட்டிருந்தார்கள் கிள்ளியும் சீர்த்தியும். அவன் பேச்சிலும், அவனுடைய தோற்றப் பொலிவிலும் ஈடுபட்டார்கள். ‘சோழ குலமாகிய கடலிலே பிறந்த நன்முத்து இவன்’ என்று தமக்குள் பேசிக் கொண்டார்கள். உதயகுமரனின் மரணத்தால் உண்டாகியிருந்த துயரத்தையும் சீர்த்தி மறந்தாள். தான் பெற்றெடுத்த மகனிடத்து உண்டாகும் பிரேமையையே, அவனிடமும் கொண்டாள்.

நாககன்னிகை தூது அனுப்பியது, தூதுவர் மீண்டுவந்து செய்தி சொல்லியது, நீலனுடன் யோசித்தது, மணிபல்லவம் புறப்பட்டு வந்தது, முனிவரைக் கண்டது, கம்பளச்செட்டியுடன் அவர் கட்டளைப்படி தன்னை அனுப்பியது, கப்பல் கவிழ்ந்தது, கரையேறியது, வலைஞர்குடிலில் தங்கியது—முதலான செய்திகள் அனைத்தையும் கூறினான் நாககுமரன். அவனுக்கு உண்டாகிய துயரத்தை எண்ணி, கிள்ளியும், சீர்த்தியும் மனம் வருந்தினார்கள். தம் துயர் தீர அவனை இரு கைகளாலும் தழுவி மகிழ்ந்தார்கள். தந்தையின் குன்றனைய தோள்கள் தன் மார்பத்தே இறுகப் பதிந்த தன்மையால் அகமும் புறமும் ஒருங்கே களித்தான் நாககுமரன்.

**கேடு
வந்தது!**

நாககுமரனுடன் அளவளாவிய முடிவிலே, சோழனின் மனத்தில் நாககன்னிகையின் நினைவு உண்டாகியது. அவள் நிலையை எண்ணி ஏங்கினான். அவள் சந்திப்பைத் தான் இனி பெற முடியுமோ, முடியாதோ என்று கலங்கினான். ஆனால் ஒருவித நம்பிக்கை அவனுக்கு இருந்தது. நாககுமரனின் பொருட்டாகவேனும் அவளைத் தான் மீளவும் காணலாம்-கண்டு அவள் காதலை நிலையாகப் பெறலாம் என்று ஒருவித ஆறுதல் கொண்டான். நாககன்னிகையை எவ்வாறு வருவிப்பது என்ற சிந்தனையிலே மூவரும் ஈடுபட்டிருந்தனர். திடீரென்று அப்போது அம்மாளிகையின் கதவுகள் பெருஞ்சத்தத்துடன் திறக்கப்பட்டன. மூவரும் திரும்பிப் பார்த்தார்கள். பண்ணனும் சோழிக ஏனாதியும் ஓடிவந்தார்கள் நடுங்கும் உடலுடன்.

"வேந்தே! வந்துவிட்டது கேடு! நாககுமரனுடன் புறப்படுங்கள்! தேவி! எழுந்திருங்கள்"

பண்ணனும் ஏனாதியும் பதறிக் கூறும் வார்த்தைகளைக் கேட்டு இடிவிழுந்தாற்போல் அறிவு கலங்கினார்கள் மூவரும்;

"என்ன? பண்ணா! ஏனாதி! என்ன நடந்துவிட்டது?"

என்று கேட்டுக்கொண்டே முன் சென்றான் விதிர்த்த கையோடு கிள்ளி.

**என்ன விபரீதம்?**

"அரசே! கடல் பொங்கிவிட்டது; நகருக்குள் பெருகிக்கொண்டிருக்கிறது. அதோ கேளுங்கள் பேரிரைச்சலை! ஜனங்கள் உயிர் தப்புவதற்காக ஓடிவருகின்றார்கள். துறைமுகமெங்கும் மூழ்கி விட்டது. கப்பல்களெல்லாம் நிலைகலங்கி மூழ்கிவிட்டன. பலர் கூக்குரலிட்டவாறே மடிந்தனர். மிகவிரைவில் இவ்வளவு பொங்கி விட்டது கடல். காரணம் தெரியவில்லை. கடல் பெருகுவதைப் பார்த்தால் விடியுமுன் இந் நகரமே அழிந்து விடும் என்று தோன்றுகிறது..."

"என்ன? கடல் நகருக்குள் பெருகி விட்டதா?—"

"உண்மையாகவா?—"

"இதென்ன விபரீதம்—"

**எங்கும் கலவரம்**

சோழன், சீர்த்தி, நாககுமரன் மூவரும் மாறி மாறிக் கேட்டு அறிவு கலங்கி செய்வதறியாமல் நின்றார்கள். ஒரு கணம் 'திடும் திடும்' என்று முழுங்கியவாறே நிலம் அதிர்ந்தது. அரண்மனையின் கீழ்த்திசைப் புறத்திலிருந்து பேரிரைச்சலும், பல விதக் கூக்குரலும், மண்டபங்களும் மாளிகைகளும் இடிந்து விழும் சப்தமும் கேட்டன. மீண்டும் நிலம் அதிர்ந்தது. 'ஓ' என்ற சப்தத்தோடு ஜனக் கூட்டமும் முனிவர் கூட்டமும் அம்மண்டபத்திற்குள் புகுந்தன. ஜனங்கள் கண்ணுக்குத் தெரிந்த வரையில் இடித்துத் தள்ளிக்கொண்டு நானா புறமும் புகுந்த வண்ணமாக இருந்தனர்.

"வேந்தே! குற்றம் என்ன நேர்ந்ததோ, கடல் நகரை அழிக்க முற்பட்டு விட்டது..."—சக்கரவாளக் கோட்டத்து முனிவர்கள் இவ்வாறு சொல்லலானார்கள்.

**யார் குற்றம்?**

"குற்றம்! யார்மீது குற்றம்? முனிவர்களே! யார் செய்த குற்றம்? நான் ஏதேனும் நெறி தவறியிருப்பேனா? புறவொன்றன் பொருட்டாக, துலைபுக்க சிபிகுலத்துக்கு, யான் எவ்வகையில் களங்கம் உண்டாக்கினேன்?"

"வேந்தே! யாம் அறியோம்! உன் மனமறிய நீயும் குற்றமற்றவன்! ஆனால் இது யார் செய்த குற்றமோ? எனினும் மக்கள் செய்த குற்றமும் மன்னனையே சாரும் அல்லவா?"

"சார்ந்தால்! தெய்வத்திற்கும் நெறியுண்டல்லவா? பாப புண்ணியம் அறியுமல்லவா? யார் செய்த குற்றமோ?—அதற்கு, கோடிக்கணக்கான உயிர்கள் வாழும் நகரை மாய்ப்பது தகுதியா? அப்படி என்ன தவறு நேர்ந்து விட்டது நான் அறியாமல்? தொன்று தொட்டு புகழுடன் விளங்கி வரும், திலகம் போன்ற இந் நகரை எதற்குக் கடல்கொள்ளவேண்டும்! இவ்வடாத செயலை மேற்கொண்ட தெய்வத்தைப்..." என்று சொல்லுகையில் 'தடால்' என்று மண்டபத்தின் பெருந் தூண் ஒன்று பிளந்து விழ்ந்தது: திடுக்குற்று அஞ்சி, யாவரும் ஒரு புறம் ஒதுங்கினார்கள். வானம் வெளிப்படையாகப் புலப்பட மண்டபத்தின் மேல் தளமும் இடிந்து வீழ்ந்தது. பேரிடிபோன்ற முழக்கம் கேட்டது. அரசன் உள்பட யாவரும் அதைக் கண்டு கண் துடிக்க நின்றனர்.

**பேரிடி முழக்கம்**

"மதி கெட்ட மன்னவா! அடாத செயலைச் செய்தது யான் அல்ல! உன் அறிவு கலங்கியிருக்கிறது: உன் நகரைக் கடல் கொள்வதற்குக் காரணம் கேள்! மணிமேகலா தெய்வத்தின் சாபத்தையும், இந்திர சாபத்தையும் நீ அறிவாயல்லவா? இந்திர விழாவை மறந்து இன்றோடு மூன்று நாட்கள் ஆகிவிட்டன; விழாத் தொடங்கும் எண்ணமே உனக்கு இல்லாததால், உன் நகரைக் கடல் கொள்ளத் தலைப்பட்டது. இனி நீ வருந்துவதில் பயனில்லை. விரைவில் நகரை விட்டு வெளியேறுவாயாக!"

வானம் இடித்தது போன்ற குரலைக் கேட்டு நடுங்கி ஒடுங்கினார்கள் யாவரும். மன்னவன் மதி கலங்கினான். கடல் கோளின் காரணத்தை உணர்ந்து பதறினார்கள்.

**மன்னன் ஆக்ஞை**

"ஆ! அறிவிழந்தேன்! உண்மை! அன்று, 'நீ நினைவிழந்து நிலை கலங்கப் போகிறாய்' என்று மணிமேகலா தெய்வம் கனவில் கூறியது இப்போது பலித்துவிட்டது. உலகம் கூறும் பழிக்கு ஆளானேன். என் உயிரனைய இந்நகரைக் கடலுக்கு விருந்திட்டேன். அழியாப் பழி கொண்டேன். இனி என் செய்வது? பண்ண, ஏனாதி யாவரையும் காஞ்சி நகருக்குப் புறப்படச் செய்க! அரும் பொருள்களை விரைவில் வெளியேற்றுக! அந்தணர் முதல் அடிமை வரையிலும் யாவரையும் வெளியேற்றுக. பசு முதலிய புனித ஜீவன்களையும், அபலைகளாகிய பெண்டிர்களையும், இளங் குழந்தைகளையும் விரைவில் முதலில் வெளியேற்றுக; நான் நாககுமரனுடனும் சீர்த்தியோடும், இதோ புறப்பட்டுவிட்டேன்!"

மன்னவன் கட்டளையை நிறைவேற்ற மின்னலென மறைந்தார்கள் ஏனாதியும் பண்ணனும். சீர்த்தி மனம் உடைந்து நின்றாள். நாககுமரன் மருண்ட பார்வையோடு தடுமாறினான். தன்னைத் தேடிய காரணத்தால், இவ்விபத்து நேர்ந்ததே என்று கலங்கினான். 'காவிரிப்பட்டினத்தின் அழிவுக்கு நாககுமரன் காரணமானான் என உலகம் கூறுமே! சோழவேந்தனும் இக் காரணத்தால் என் மீது வெறுப்புக்கொள்வானே! தெய்வம் இந்த நிலையை ஏன் உண்டாக்கியது?' என்று ஏங்கினான்.

நாககுமரனின் மனமாற்றத்தை அவன் முகக்குறிப்பால் அறிந்துகொண்டான் சோழன். அவன் மனம் புண்பட்டிருப்பதை

எளிதில் உணர்ந்தான். உடனே அவனை இருகைகளாலும் தழுவிக் கொண்டான்.

"தொண்டைமான்! ஏன், நீ கலங்குகிறாய்? நகரம் அழிவதற்காக வருந்தாதே. உன்னை அடைந்தபின் இனி எனக்கு என்ன வேண்டும்? நாகர்குல மணியும், சோழர்குல விளக்குமான உன்னை பெற்றுவிட்டேன். இனி நான் இந்நகரழிவுக்கு வருந்தேன். விதியின் காரியம் இப்படி இருக்கிறது. உன் பொருட்டு, யான் எதை இழப்பதானாலும் அதற்கு வருந்தேன்; இந்நகர் அழிந்துபோனால் என்ன? காஞ்சி நகர் உள்ளது. பழம் பெரும்பதியான உறையூர் உள்ளது; இப்போதே நாம் நம் பரிவாரங்களுடன் காஞ்சிநகர் புறப்படலாம்......"

சோழனின் வார்த்தைகள் தொண்டைமான் உள்ளத்திலிருந்த கலக்கத்தை அகற்றி ஆறுதலை அளித்தது. மீண்டும் சோழன் அவன் முகத்தைத் தடவியவாறே, "தொண்டைமான், நீ பெரும் பாக்கியம்பெற்றவன்: காஞ்சி நகரில் உன் ஆட்சி தொடங்கப்போகிறது: நீ, உலகாளும் முடிமன்னனாக விளங்கப் போகிறாய்; இன்று முதல், நீயே, சோழநாட்டின் முடி மன்னன்!......" என்று சொல்லுகையில் பேரிரைச்சல் மிகுதியாக உண்டாயிற்று: பண்ணனும் ஏனாதியும் முன்வந்தனர். அவர்களுக்குப் பின்னர் ஜனக்கூட்டம் காணப்பட்டது. கூக்குரலும் புலம்பலுமாகவே அரசன் செவிகளில் புகுந்தன. திடுக்கிட்டு நின்றான்.

### மனப் பதற்றம்

"வேந்தே, புறப்படுக விரைவில்! நகரில் யாவரும் வெளியேறிவிட்டார்கள். நகரின் பெரும் பகுதியும் கடலுள் மூழ்கிவிட்டது. எங்கும் நீர் சூழ்ந்துவிட்டது; இன்னும் சிறிது நாழிகையில் இவ்விடத்தையும் அடைந்துவிடும். படைகள் யாவும் புறப்பட்டுவிட்டன: தேர் ஆயத்தமாக



பண்ணனும் ஏனாதியும் பதறிக்கூறும் வார்த்தைகளைக்கேட்டு இடிவிழுந்தாற்போல் அறிவு கலங்கினார்கள் மூவரும்.

வாயில்மாடத்தில் நிற்கின்றது...” என்றான் பண்ணன். ஜனக்கூட்டங்களை மெள்ள மெள்ள அப்புறப்படுத்தி அனுப்பிக்கொண்டிருந்தான் சோழிக ஏனாதி. ஜனங்கள் யாவரும் அரசன் கட்டளைப்படி தத்தம் பொருள்களோடு, கண்ணீர் சொரிந்தவாறே வெளியேறிவிட்டனர். கடல் அலைகள் அணிமையில் கொந்தளித்து முழங்குவதைக் கேட்ட சோழன் மனம்பதறினான்.

நள்ளிரவாகிவிட்டது அதற்குள். எனினும் வானவீதியில் முழுமதி தன் வெண்கிரணங்களை அள்ளிப் பொழிந்துகொண்டிருந்தான். அரசன், நாககுமரன், சீர்த்தி மூவரும் அவ்விடம்விட்டு வாயில் மாடத்தை அடைந்து தேரில் ஏறினார்கள். பரிவாரங்கள் அவனுடன் புறப்பட்டன. நால்வகைப் படைகளும் அணிவகுத்துப் புறப்பட்டன. வண்டிகளிலும், தேர்களிலும், யானை, குதிரை, பல்லக்குகளிலும் பண்டப்பொதிகள் ஏற்றப்பட்டுச் சென்றன. நூற்றுக்கணக்கான பல்லக்குகள், தேர்கள், யானைகள் குதிரைகள்—இவற்றில் கணக்கற்ற ஜனங்கள் கண்ணீர் ததும்பிய முகத்தோடு அமர்ந்து அரசனைப் பின்பற்றினார்கள். அந்தணர் வீரர், வணிகர், வேளாளர் முதலிய யாவரும் அவரவர் ஊர்திகளில் இவர்ந்து சென்றார்கள். அரண்மனையைக் கடந்து புறநகரையும் விட்டு, நகரின் எல்லையைக் கடந்தனர். அவர்கள் போகப் போக அலைகடலின் பேரிரைச்சலும் அதிகரித்தது. யாவரும் கனவு கண்டவர் போன்றநிலையினராய் நகரெல்லையைக் கடந்துநின்று நகர் கடலில் மூழ்கும் காட்சியை மனம் பதைபதைக்கக் கண்டார்கள். தேரை நிறுத்திய அளவிலே, அரசன் கடல்கொள்ளும் நகரைக் கண்ணீர்த்திரையிடையே கண்டான்; உள்ளம் கொதித்தான். பாழ்பட்ட பெருநிலமாகி விட்ட—மஹா மயானம் போன்ற தன்மையை அடைந்த அந்நகரைக் கடல் விரைந்து கௌவிக்கொண்டது. யாவரும் நகரை விட்டு வெளியேறி விடவே அதன் கொண்டாட்டம் மிகுந்தது.

‘ஓ’ என்ற பேரிரைச்சலோடும், ‘திகு திகு’ வென்ற பெருமுழக்கத்தோடும் கடல் சீறியெழுந்து நகரெங்கும் பரந்து நிறைந்தது. வானிலே கணக்கற்ற தாரைகள் ஒளிவீசி, கடல்கோளின் காட்சியை நன்கு எடுத்துக்காட்டின. முழுமதியும் தன் புன்னகையாகிய நிலவமுதைப் பொழிந்து, கடலின் கொந்தளிப்பையும் குதூகலத்தையும் மிகுதிப்படுத்தினான். அரசனும் மற்றையோரும் அதன் அநீதத் தாண்டவத்தைக் கண்டு பதறினார்கள். கடலலைகள் சுழன்று மோதும் முழக்கமும், மாடமாளிகைகளும், கூடகோபுரங்களும், மண்டபங்களும், விஹாரங்களும், ஆலயங்களும், ஒன்றோடொன்று மோதி நிலைகுலைந்து நீருள் ஆழும் கோர சப்தமும் கேட்பவர் யாவருள்ளத்தையும் நிலைகலக்கின. ஊழியின் முடிவில் உண்டாகும் பிரளயத்திற்கு ஒப்பாகத்தோன்றிய அக்கடல் கோளின் காட்சியிலே கருத்தழிந்தான் நெடுமுடிக் கிள்ளி.

**மன்னன் புறப்பாடு**

“தெய்வமே! என்னுடைய ஆட்சியோடு இந்நகரும் அழிந்தது. இனி இந்நகரை மணல் மூடிய திட்டாக ஆக்கிவிடும் இக்கடல். தொன்றுதொட்டு பெருமையோடு விளங்கிய இந்நகரை, இனியாரும் காணமுடியாது; ஆனால் இந்நகரின் பெயரும் புகழும் என்றும் அழியாதவை. அதோடு இந்நகர் அழிவுக்குக் காரணமான என்னையும் யாரும் மறவார்கள். உலகம் உள்ளவரையில் இப்பழி என்னைவிட்டு அகலாது. என் பெயரோடு இப்பழியும் சேர்ந்து உலாவும்; இந்தப் பெருங்கடல் கோளின் கோரக்காட்சி, எந்தக் கவிஞனுடைய காவியத்திலே பிரலாபிக்கப்படுமோ! அரும்பாடுபட்டுப் பன்னெடுங்காலமாகமுயன்று, கலையழகுதோன்றவும், தெய்வத்திறம் பிரதிபலிக்கவும் நிருமாணித்துப் பாதுகாத்து வந்த இந்நகரை, கருணை சிறிதும் இல்லாமல், இவ்வளவு விரைவில் கடல்கொண்டு மறைத்துவிட்டதே! அதோ எங்கும் வெண்ணிறப் பெருங்கடலே காட்சியளிக்கின்றது! நகர் இருந்த இடம் தெரியாமல் யாவும் மறைந்து பாற்கடல் போன்ற காட்சியை நன்கு, நாம் காணுமாறு, தாரகைகளும், முழுமதியும் தம் ஒளிக் கிரணங்களைக் காட்டுகின்றன. இனி இவ்விடம் தங்கியிருத்தலும் தகாது. ஜனங்களே! அறிஞர்களே! நம் தாயன்ன நகரத்தை இழந்துவிட்டோம்! எனினும், நாம் அதை மறவோம். தாய்க்கு ஒப்பான இந்நகரைக் கை தொழுது வணங்கிவிட்டு யாவரும் புறப்படுக!” என்று கூறியவனாய் கடல் மூழ்கிய நகரை நோக்கிக் கை தொழுதான். கண்ணீர் பெருக்கினான்; சிறிது நாழிகை பேச்சற்று நின்றான். அரசன் கட்டளைப்படி யாவரும் உள்ளமும் உடலும் சோர்ந்தவர்களாய், கடல்கோள் கொண்ட நகரைக் கை தொழுதார்கள். அடுத்த கணமே, அரசனின் தேர் புறப்பட்டது. வரிசையாக யாவரும் புறப்பட்டு அரசனைப் பின் தொடர்ந்தார்கள்.

முழுமதியின் வெள்ளொளியையே துணையாகக் கொண்டு யாவரும் காஞ்சிமாநகர் நோக்கி யாத்திரை தொடங்கினார்கள். ஒரு சிலர் மட்டும் உறையூர் நோக்கி யாத்திரை செய்தார்கள்.

கடலும் தன் பெரும் பசி தீர்ந்ததுபோல், காவிரிப்பட்டினம் முழுவதும் மூழ்கி நிறைந்த பின் ஒலியவிந்து அமைதி கொண்டது. வானில் முழுமதியும் தாரகைகளும், கடல்கோளின் பெருவிளையாட்டைக் கண்டு மௌனமாக ஒளியால் எள்ளி நகையாடின. ஊழி முடிவில் உலகம் அறிவுற்ற பின்னர், உண்டாகும் தூய அமைதிக்கு ஒப்பாகவே, அக்கடல் கோளைக் கூறலாம் அல்லவா?

(தொடரும்)

பாரதி புதுவைநிகழ்ச்சி

# 'எல்லாம் அவன் செயல்'



## ஸ்ரீமதி தங்கம்மாள் பாரதி

கவி. ரவீந்திரரின் சிறுகதைகளைத் தமிழில் மொழி பெயர்த்தார் தந்தை. அந்த சமயம் நாட்டுக் கல்வி இயக்கம் தேசத்தில் மும்முரமாய் இருந்தது. எல்லா நாட்டினரும் கல்வி கேள்விகளில் அதிக ஊக்கம் காண்பித்து கலை நுட்பங்களை அறிகிறார்கள். வங்காளத்தில் டாகுர், ஜகதிச சந்திர வசு, பி. ஸி. ராய். முதலியவர்கள் கலையாராய்ச்சியில் வல்லவராய் உலகம் போற்றும்படி விளங்கினார்கள். ரவீந்திரரின் "நாட்டுக் கல்வி" என்னும் கவிதையைத் தந்தையார் தமிழில் மொழி பெயர்த்தார். "விளக்கிலே திரி நன்கு சமைந்தது மேவுவீர் இங்கு தீக் கொண்டு தோழரே," என்பது அந்தக் கவிதையின் முதலடி. நமது கலைகள் மங்கி ஒளியிழந்து போன சமயம் தோன்றிய வீரர்களான டாகுர், வ. சு. முதலிய பேரறிஞர்களை தந்தையாரின் மனம் எப்போதும் வாழ்த்தும். நினைத்து நினைத்து, பேருவகை கொள்ளும். அஹிம்சா தர்மத்தின் ஸ்தாபகரான மகாத்மாவின் அருள் வன்மையும், அவரது மனத் திண்மையையும், அவரது எளிய வாழ்க்கையையும் எண்ணி-உடல் பூரிப்பார்.

நமது தேசத்தில் எத்தனையோ ஞானிகள் தோன்றியிருக்கிறார்கள். ராமாநுஜர் உபதேசித்த 'சரணாகதி' தத்துவம் தந்தையார் மனத்தை ஆகர்ஷித்தது. கடவுளைப் பரிபூர்ணமாக நம்பி தான் ஒருவித பொறுப்பும் எடுத்துக்கொள்ளாமல் "எல்லாமவன் செயல்" "எதுவுமவன் திருவிளையாட்டு" என்று பற்று நீங்கிய மனப்பான்மைகொண்டு இருத்தலே உண்மைத்தவம் என்பது தந்தையார் தானனுபவத்தில் கண்ட உண்மை. நான் என்ற அகம்பாவம் ஒழிந்து கடவுளே என்னுள் குடிகொண்டுள்ளான் என்ற நினைப்புடன் ஒருவன் தன் தொழில்களைச் செய்துவந்தால் அந்தத் தொழில் கடவுளின் செயலாகிறது. அவன் கடவுளை எய்துகிறானென்ற உண்மைத் தத்துவத்தைக் கொண்ட ராமாநுஜர் தமது சிஷ்யர்களுக்கு "பொறுப்பு முழுதையும் கடவுள் தலையில் சுமத்தி, நீ கொஞ்சமும் பொறுப்பேற்றுக் கொள்ளாதே" என்ற உபதேசத்தை "பக்தா, நீ இரண்டு கைகளையும் விடு. நதியில் விழுந்தவன் போல" என்று உபதேசித்தாராம். இந்த அவதார புருஷர்களையெல்லாம் தந்தையார் மனத்தில் வைத்துப் போற்றி வருவதனால் சில சமயம், கவியாகவே, அது வெளிவரும். மகாத்மா காந்தியின், "வலது கை, இடது கை" என்று அக்காலத்தில் பெயர் வாங்கியிருந்த மகம்மது அலி, ஷவுகத் அலி இவர்களின் வீரம் நிறைந்த வாழ்வும், மன வலிவும் தந்தையாருக்கு பிடித்தமான விஷயம்.

ராமாநுஜ முனி பதம்
வாழ்கவே.
ராமாநுஜமுனி பதம்
வாழ்கவே.
இரண்டு கைகளையும் விட்டு
விட்டா என்றுபதேசித்
தான்.]

கலைப்பேன் செல்வர்
செருக்கையென்ற
காந்தி ஓங்கவே.
நிலைப் பேரானந்த முறை
யெந்நாளும் மண்மிசை
நிறுத்துவேன் இங்கு உயிரை
என்ற வசு ஒளிர்கவே.
மரண பயத்தை ஒழிப்பேன்
என்ற மகம்மதலி
வாழ்கவே.
சரணம் அல்லாவோன்றே
என்ற ஷவுகத் அலி
வாழ்கவே.

என்று மனதிற்குள்ளாகப் போற்றுவார்.



# பிரபந்த நந்தவனம்

XVIII

## பொய்கையாரின் சுய சரித்திரம்

★

பி. ஸ்ரீ

பொய்கையாழ்வார் இளமையிலிருந்தே விஷ்ணு பக்தி உள்ளவராக வளர்ந்திருக்க வேண்டும் என்று ஊகிக்கும்படியிருக்கின்றன இவர் பாடல்கள், கருவிலேயே தமக்கு ஸ்ரீரங்க பக்தி வாய்த்துவிட்டதாக இவர் கூறுவதிலிருந்து, இவர் பிறப்பிடமும் சுற்றுணர்ச்சிகளும் எல்லாம் பக்தி மயமாக இருந்தன என்று கருதலாம்.

### கதை கேட்டார்!

இளமையிலே விஷ்ணு கதைகள் கேட்டுக் கேட்டு இன்புற்று இருக்க வேண்டும் இந்த உள்ளம். கடல் கடைந்த கதை. உலகம் அளந்த கதை முதலான ஹரிகதைகள் பெரிதும் வசீகரித்திருக்கவேண்டும். ஸ்ரீ கிருஷ்ண சரித்திரங்களிலும் இவர் தமது உள்ளத்தைப் பறிகொடுத்திருக்கவேணடும் இந்தக் கதைகளெல்லாம் இவரது பக்தியுள்ளத்தையும் கவியுள்ளத்தையும் ஊட்டி வளர்த்தன என்று ஊகம் செய்யலாம்.

பொய்கையாழ்வார் காலத்தில் காஞ்சீபுரத்தை ஆண்ட அரசனும் விஷ்ணு பக்தனாக இருந்தானென்று ஊகிப்பவர்களும் உண்டு. ஆனால் அந்த அரசனைக் குறித்தாவது, வேறு அந்தக் கால வரலாறுகளைக் குறித்தாவது இவர் ஒன்றும் சொல்லவில்லை. "பகவானை மறந்தறியேன்!" என்று சொல்லுகிறவருக்கு மற்ற நினைவுகள் மறந்து போவது இயல்புதானே? தாம் கண் எதிரே பார்த்த அரசர்களைக் காட்டிலும், ஜனங்களைக் காட்டிலும், தம் கண் முன்னே நிகழ்ந்த நிகழ்ச்சிகளைக் காட்டிலும், எவ்வளவோ நிஜமாக மனக் கண் முன் நிகழ்ந்து கொண்டிருந்தன, ஹரிகதைகளும் அந்த விவரங்களும்.

### தீவிர விஷ்ணு பக்தி

"பகவானுடைய பெயர்களைத் தவிர மற்ற எதையும் என் செவிகள் கேட்கமாட்டா!" என்று இவரே பாடியிருக்கிறார். "கண்ணனுடைய உருவத்தைத் தவிர வேறு எதையும் கண்கள் காணமாட்டா!" என்றும் கூறுவதால், கண்ணன் கதைகளில்தான் எவ்வளவு ஈடுபாடு இவருக்கு!

"வாய் அவனை அல்லது வாழ்த்தாது!" என்றும் சொல்லுகிறார்: ஹரி கதைகள் சொல்வதிலும் அந்த நாமங்களை உச்சரிப்பதிலும், பகவானுடைய குணங்களில் ஈடுபட்டு அவற்றைப் புகழ்ந்து கொண்டிருப்பதிலும் இவருடைய ஆசை பேராசையாகி விட்டது என்பது கருத்து.

மேலே சொன்ன கருத்துக்களை வெளியிடும் பாட்டிலே, "உலகங்களைத் தாவி அளந்த உத்தமனை அல்லது வேறொரு மூர்த்தியையும் என் கைகள் தொழமாட்டா" என்றும் தமது தீவிர மத உணர்ச்சியை வெளியிடுகிறார். எனினும் இவருக்கு மதவெறியாவது பிறமதத் துவேஷமாவது இல்லை என்பது இவர் சிவபெருமானையும் பக்தியோடு குறிப்பிடுவதிலிருந்து தெரிகிறது.

இனி இவரது தீவிர விஷ்ணு பக்தியை வெளியிடும் மேலே குறித்த பாட்டைப் பார்ப்போம்:

வாய்அவனை அல்லது
  வாழ்த்தாது; கை, உலகம்
தாயவனை அல்லது
  தான்தொழா;—பேய்முலை
      நஞ்(சு)
ஊணாக உண்டான்
  உருவொடுபேர் அல்லால்,
காணாகண், கேளா
  செவி.

[தாயவனே—தாவியவனே. பேய்—இங்கே பேயான பூதனை. ஊண்—உணவு.]

மகாவிஷ்ணுவின் ரக்ஷக சக்தியை உலகம் தாவி அளந்த கதையும், துஷ்ட நிக்ரக சக்தியைப் பேய் மகளான பூதனையின் வதமும் வெளியிடுகின்றன இந்தப் பாட்டிலே. இந்த இரு வகைச் சக்திகளையும் வெளியிடும் ஹரி கதைகளெல்லாம் பொய்கையார் உள்ளத்துக்கு அமுதமாக இருந்தன என்று சொல்லலாம்.

"நல்லவன் பகவான் ஒருவன் தான்; அருள் என்பதும் அவனுடைய அருள் ஒன்றுதான்!" என்று துணிந்தவர், உலகத்திலுள்ள பலர் அருள் அல்லது தயவும் பயனற்றது. என்று கருதியதில் அதிசயம் இல்லை. அரசர், பிரபுக்கள் முதலானவர்களுடைய தயவை இவர் கொஞ்சமும் எதிர்பார்க்கவில்லை என்ற சுய சரித்திரப் பகுதியைத்தான் இந்த வாக்கிலே காண்கிறோம்.




## யோகம் செய்தாரா ?

இவர் காஞ்சீபுரத்தில் நிலையாக வசித்து வரவில்லை என்றும், தேசமெங்கும் யோகியாகத் திரிந்து கொண்டிருந்தாரென்றும் கதை சொல்லுகிறதல்லவா? அப்படித் திரிந்து கொண்டிருந்த ஸ்தலங்களில் திருக்கோவலூரும்,திருப்பதியும் இவரை விசேஷமாக வசீகரித்திருக்கக் கூடும்.

இவர் யோகாப்பியாசங்களில் பழகியவர் என்பதற்கும் பாடல்களில் அகச்சான்று கிடைக்கிறது. ஐம்புலன்களிலும் போய்ப் போய் மேய்ந்து கொண்டிருக்கும் உள்ளத்தை மேய்ப்போனாகிய பகவான் வசமாக்கி ஞானத் தெளிவுபெற்று விளங்கும் பெரியோர்களை இவர் பாடல்கள் குறிப்பிடுகின்றன. "அந்தப் பெரியோர்களின் உள்ளம் தாயை நாடும் கன்று போல் தாயாகிய பரமனையும் எளிதாக நாடிப் போகும்" என்று கூறும்போது இவர் தமது அனுபவங்களை ஒட்டிப் பேசுவது போலவே தோன்றுகிறது.

இமையாத கண்ணால்
இருள் அகல நோக்கி,

"மேய்ப்பவனைக் கண்டு கொண்டு, பட்டி மாடுகளாகிய பஞ்சேந்திரியங்களையும் கட்டிப் போடும் அல்லது அடக்கி வைக்கும் யோக வித்தையையே இவர் சிறந்த யோகமாக மதிக்கிறார்.

இத்தகைய அப்பியாசங்களிலே பழகி வந்த இவர், ஏதோ ஒரு யந்திரம் போல் அல்லது கிளிப்பிள்ளைபோல் ஜபம் செய்வதிலோ, மந்திரங்களை உருவேற்றுவதிலோ நம்பிக்கை கொள்ளவில்லை என்றும் தெரிகிறது.

"என் நெஞ்சே! எப்போதும் எம்பெருமான் விஷயமாகப் பேசும் பேச்சையே சிந்தித்துக்கொண்டிரு" என்றெல்லாம் நெஞ்சுக்குச் செய்துகொள்ளும் உபதேசங்களையும் இவர் தமது யோகத்தின் பகுதியாகவே கருதியிருக்கவேண்டும்.

இத்தகைய யோகிகளின் தியானத்திலே வெளிப்படும் உருவம் பகவானுடைய உருவம் தான் என்றும், இவர்கள் கொடுக்கும் பேர்கள் எல்லாம் அவனுடைய நாமங்கள் தான் என்றும் உறுதி கூறுகிறார் பொய்கையார்.

"மனிதன் சிந்திக்கிற வண்ணம் உருவாகிறான்; அதாவது தன்னை உருவாக்கிக் கொள்கிறான்" என்ற கொள்கையை நவீன மன நூலாரும் ஒப்புக்கொள்கிறார்கள். பொய்கையாரோ "மனிதன் அவ்வண்ணமே உருவாக்குகிறான்

பகவானையும்!" என்கிறார். இத்தகைய மனித சக்தி யோகசக்தி தான்.

## ஸித்தியை எதிர்பாராத சக்தி

யோக சக்தியால் கிடைக்கும் ஸித்திகளில் மன மாசு தீர்ந்து மனம் தெளிவு பெறுவதும் ஒன்று. தீவினைகள் அணுக முடியாமல் எட்ட நிற்பதும் ஒன்று. மூன்றாவதாக, சாதகன் விரும்பும் பொருளும் தானே வந்து கைபுகும் என்கிறார். ஆனால் இவரைப் போன்ற பக்திமான்கள் விரும்பும் செல்வமெல்லாம் பரம பக்திச் செல்வம் தானே!

இத்தகைய சாதனங்களெல்லாம் தாமே வந்து கை புகும்; நாமே விரும்பலாகாது!- என்பது பக்தர் கொள்கை. இப்பேர்ப்பட்ட பக்த யோகிகள் பரமபத அனுபவத்தோடு இந்தப் பூமியையும் ஆட்சி செய்யக்கூடும் என்கிறார் பொய்கையார்.

## என்ன இளமை! என்ன வளர்ச்சி!

இந்த ஞான அரசர் சாதாரண அரசர்களையும், பிறர் பொருளையும் மதிக்கவில்லை என்பதில் வியப்பு ஒன்றுமில்லை:

நாயவேன் பிறர்பொருளை;
நள்ளேன் கீழாரோ(டு);
உயவேன் உயர்ந்தவரோ(டு)
அல்லால்;—வியவேன்;
திருமாலை அல்லது
தெய்வமென்(று) ஏத்தேன்:
வருமா(று)என் என்மேல்
வினை ?

[நயவேன்— விரும்பமாட்டேன். நள்ளேன்—நட்பு வைத்துக்கொள்ள மாட்டேன். உயவேன்-காலக்ஷேபம் பண்ண மாட்டேன். வியவேன்—ஆச்சரியப்பட மாட்டேன்.வருமாறு -வரும் விதம். என்-என்ன.]

இளமையிலிருந்தே பிறர் பொருளை விரும்பாத இவர் தம்முடைய ஆத்மாவையும் பகவானுடைய பொருள் என்றே மதித்து அந்தப் பொருளையும் "எனது" என்று கருத வில்லையாம்.

பக்தியில்லாதவர்களையே கீழ் மக்கள் என்று கருதிய இப்பெரியார் அந்தக் கீழ் மக்களோடு சிநேகம் செய்து கொள்ள வில்லையாம். பக்தர் அல்லாதவர்கள் அரசர்களானாலும் அவர்களை மதிக்க மாட்டார் என்பது குறிப்பு. பக்தர்களையே உயர்ந்தவர்கள் என்று மதித்து நண்பர்களாகக் கொண்டு பழகி வந்தார் என்பதும் குறிப்பு.

இந்தப் பாட்டிலே பொய்கையாழ்வாரின் சுய சரித்திரம் எவ்வளவு தெளிவாக இருக்கிறது! இத்தகைய பக்த யோகி, உயர்ந்தவர்களிடத்திலெல்லாம் பகவானையே கண்டார்; இயற்கையிலும் ஈசனைக் கண்டார். அச்சமே அறியாத அன்பு வாழ்வு வாழ்ந்தார்.

இத்தகைய சுய சரித்திரக் குறிப்புக்கள் பொய்கையாழ்வார் பாடல்களில் காணப்படுகின்றன. பொய்கையாழ்வாரைப்பற்றி வழங்கும் கதைகளைக் காட்டிலும் சுய சரித்திரம் முக்கியமானதல்லவா!

---

# லாப நஷ்டம்!



[ என். நாராயணன், பி. ஏ. ]

அன்று வகுப்பு முழுவதும்அதே பேச்சாகத்தான் இருந்தது. எல்லாப் பையன்களும் கிட்டுவின் அதிருஷ்டத்தைக்குறித்து வியந்துகொண்டிருந்தனர். அவனைக் கண்டு பலருக்குப்பொருமை உண்டாயிற்று.

விஷயம் ஒன்றும் பிரமாதமானதல்ல.

சங்கரனிடமிருந்த கைக் கடியாரத்தைக் கிட்டு ஆறு ரூபாய்க்கு வாங்கிவிட்டான் என்பதுதான்!

சங்கரன் அதேக் கடியாரத்தை யாரிடமிருந்தோ, கொஞ்சகாலத்திற்கு முன்புதான் பத்து ரூபாய்க்கு வாங்கியிருந்தான். அது பார்ப்பதற்கு வெகு அழகாகவும் நேர்த்தியாகவும் இருந்தது. அதைப் பார்த்துவிட்டு எல்லாப் பையன்களும் பரவசமடைந்தனர்! சிலர், சங்கரனிடம் "நான் பதினைந்து ரூபாய் தருகிறேன்: எனக்குக் கொடுத்துவிடு" என்றும், "நான் இருபது தருகிறேன்: கொடுப்பாயா?" என்றும் கூடக் கேட்டுப் பார்த்தனர். சங்கரன், பிடிவாதமாக, "நீங்கள் நூறு ரூபாய் கொடுத்தாலும் நான் இதைக் கொடுக்கப் போவதில்லை!" என்று சொல்லிவிட்டான்.

"அப்படிச் சொன்ன சங்கர'னு இன்று கிட்டுவிற்குக் கடியாரத்தை விற்றுவிட்டான்?... என்ன ஆச்சரியம்!...அதுவும் ஆறே ரூபாய்க்கு!...கிட்டுவின் அதிர்ஷ்டமே அதிர்ஷ்டம்!" என்று எல்லோரும் வியந்து கொண்டார்கள்.

* * * *

அன்று சாயங்காலம், பள்ளிக்கூடம் முடிந்து வீட்டுக்கு வரும் வரையில் கிட்டு தன்னை விட அதிர்ஷ்டசாலி இந்த உலகத்திலேயே யாரும் கிடையாது என்றுதான் எண்ணிக் கொண்டிருந்தான்.

வீட்டுக்கு வந்தவுடன் கையிலிருந்த கடியாரத்தைக் கழற்றினன். அப்பொழுது தற்செயலாக அதன்மீது அவன் பார்வை விழுந்தது. மணி இரண்டைக் காண்பித்தன முட்கள்! கிட்டுவிற்குத் தூக்கிவாரிப்போட்டது. "இது வேளை இரண்டு மணியில் நின்றுவிட்டதுபோலிருக்கிறது. சாவி கொடுக்கவில்லையோ, என்னவோ?" என்று எண்ணி சாவி கொடுக்க முயன்றுன். கடியாரத்திற்கு ஏற்கனவே முழு அளவிற்குக் சாவி கொடுக்கப்பட்டிருந்ததை உணர்ந்தான். அப்பொழுதே, அவன் மனதில் ஒரு பெரும் பாரம் தோன்றியது. சங்கரனிடம் ஏதோ ஒருவித சந்தேகம் தோன்றவாரம்பித்தது.

அன்றிரவு பத்து மணி வரையில் கடியாரத்தை வைத்துக்கொண்டே அப்படியும் இப்படியும் அதை குலுக்கிக்கொண்டும், ஆட்டிக்கொண்டும் உட்கார்ந்திருந்தான். கடியாரம் இரண்டு மணியையே காண்பித்துக் கொண்டிருந்தது.

"சங்கரனை யோக்கியன் என்று நினைத்திருந்தேன்......ஹூம்......ஏமாற்றிவிட்டான்!... எல்லாப் பையன்களும் என்னைவிட அதிர்ஷ்டசாலி இல்லை என்று வயிற்றெரிச்சலுடன் கூறிக்கொண்டார்களே!... நானல்லவா உண்மையில் ஏமாந்துவிட்டேன்!...இந்த வெட்கக்கேட்டை யாரிடம் சொல்வது?...காலணுப் பெருத கடியாரத்தை ஆறு ரூபாய் கொடுத்து வாங்கிவிட்டேனே!" என்று கிட்டுவின் மனம் எண்ணுத எண்ணமெல்லாம் எண்ணி எண்ணிப் புண்ணுகித் தவித்தது.

அன்றிரவு அவனுக்குந் தூக்கமே பிடிக்கவில்லை.

* * * *

மறுநாள் காலையில், பத்து மணிக்கெல்லாம் பள்ளிக்கூடத்திற்குப் புறப்பட்டான் கிட்டு. கடியாரத்தை, அழகிற்காகவாவது இருக்கட்டுமென்று எண்ணி கையில் அணிந்து கொண்டான். மணியைப் பத்துக்கு மாற்றிக்கொண்டான்.

பள்ளிக்கூடத்தை யடைந்ததும் பையன்கள் எல்லோரும் அவனை சூழ்ந்துகொண்டனர்.

"உன்னைப்போல் யாருக்கடா அதிர்ஷ்டம் அடிக்கும்?.........ஆறு ரூபாய்க்கு இவ்வளவு அழகானகடியாரத்தைத் தட்டிக்கொண்டு போய் விட்டாயே! என்ருர்கள்.

"ஏன் உங்களுக்கெல்லாம் இவ்வளவு வயிற்றெரிச்சலும், பொருமையும்?.........எனக்குச் சிறிதுகூடப் பிடிக்கவில்லை...... உங்களுடைய இந்த உபத்திரவத்தை என்னுல் பொறுக்கவும் முடியவில்லை!...வேண்டுமானுல், யாருக்காவது இதைத் திருப்பி விற்றுவிடுகிறேன்!......" என்று சலித்துக் கொண்டவன் போல் கூறினுன் கிட்டு. உண்மையில் அவன் மனம் "இதை எப்படியாவது,எவனிடத்திலாவதுதள்ளி விட்டால்போதும்" என்று துடித்துக்கொண்டிருந்தது.

"அப்படியானுல், நான் வாங்கிக்கொள்கிறேன் ......எனக்குக் கொடு: என்ன விலை?" என்று பல குரல்கள் ஏககாலத்தில் கிளம்பின.

கிட்டு யோசித்தான்.

"ஆமாம்: நீங்கள் எல்லோரும் சேர்ந்தாற்போல் கேட்டால் நான் யாருக்கென்று கொடுப்பது?......ஒருவனுக்குக் கொடுத்தால், மற்றவர்களுக்கு வருத்தம் உண்டாகும்!...... இதற்கென்ன செய்வது?...ஹூம்...சரி எனக்கு ஒரு யோசனை தோன்றுகிறது... அதன்படி நடக்க ஒப்புக்கொண்டால், எனக்கும் பொல்லாப்பு உண்டாகாது ...... உங்களுக்கும் அதில் நல்ல லாபம் கிடைக்க வழியிருக்கிறது!......என்ருன்.

"என்ன வழி?" என்று எல்லோரும் ஆவலுடன் கேட்டனர்.

'சரி...நீங்கள் நால்வர் இருக்கிறீர்களல்லவா?...தலைக்கு இரண்டு ரூபாய் போடுங்கள். மொத்தம் எட்டு ரூபாய் ஆகிறது. உங்கள் நால்வரின் பெயர்களையும் நான்கு சீட்டுகளில் எழுதிப்போட்டுக் குலுக்கி ஒரு சீட்டை எடுக்கிறேன்...யாருடைய பெயருள்ள சீட்டு வருகிறதோ, அவருக்கு இந்தக் கடியாரம் சொந்தமாகும்!...என்ருன் கிட்டு.

"அப்படியானுல் பாக்கி மூன்று பேர்களுக்கும் தலைக்கு இரண்டு

ரூபாய் நஷ்டமாகுமே!" என்றான் சேஷன்.

"ஆமாம்!" ஆனால், இரண்டே ரூபாய்களுக்கு, எட்டு ரூபாய் மதிப்புள்ள கடியாரம் ஒருவருக்குக் கிடைக்குமே!...அது உங்களில் யாருக்கு வேண்டுமானாலும் கிடைக்கலாமல்லவா?.....அதையும் யோசித்துப்பார்!... போனால் இரண்டு ரூபாய்: வந்தால் எட்டு ரூபாய் மதிப்புள்ள கடியாரம்!".. என்று வெகு சாதுரியமாகப் பேசி, அவர்களுடைய ஆவலைத் தூண்டி விட்டான் கிட்டு.

அவர்கள் நால்வரும் சிறிது நேரம் யோசித்துப் பார்த்தனர். கடைசியில், அவரவர் அதிர்ஷ்டத்தைப் போல் நடக்குமென்று தீர்மானித்துத் தலைக்கு இரண்டு ரூபாய் போட்டு, எட்டு ரூபாய்களையும் கிட்டுவினிடம் கொடுத்தனர். கிட்டு நான்கு சீட்டுகளில் நான்கு பெயர்களையும் எழுதிக் குலுக்கி, ஒரு சீட்டை எடுத்தான்.

அதிர்ஷ்டம் பஞ்சுவுக்குத்தான் இருந்தது. அவன் பெயருடைய சீட்டு எடுக்கப்பட்டது. கடியாரத்தைக் கழற்றிப் பஞ்சுவிடம் கொடுத்தான் கிட்டு. சேஷன், முத்து, வேம்பு மூவரும் அளவு கடந்த ஏமாற்றத்துடன், பேச வழியின்றித் தங்களுடைய வகுப்பிற்குச் சென்றனர்.

அன்று பள்ளிக்கூடம் முடிந்தது. பஞ்சு காற்றினும் கடும் வேகத்துடன் வீட்டிற்கு ஓடி வந்தான் தன்னுடைய புதிய பொக்கிஷத்துடன் கொஞ்சி விளையாடுவதற்காக!

அவன் சந்தோஷமும், பெருமையும், பூரிப்பும் வெகு நேரம் நீடித்திருக்கவில்லை.

சற்று நேரத்திற்கெல்லாம் உண்மை வெளியாகியது. கடியாரம் உயிரற்று, உணர்ச்சியற்று, பேச்சு மூச்சின்றிக் கிடந்ததை உணர்ந்ததும், அவன் தேகமும், மனமும் துடித்தன!

"கிட்டுப் பயல் என்னை ஏமாற்றவா பார்த்தான்?...விட்டேனா பார், அவனை!" என்று ஆத்திரத்துடன் கையில் கடியாரத்தை எடுத்துக் கொண்டு, கிட்டுவின் வீட்டிற்கு ஓடினான்.

* * * *

பஞ்சுவை மிகவும் நிதானமாகச் சாந்தப்படுத்தினான் கிட்டு.

"பதட்டப்படாதே, பஞ்சு!... நானும் உன்னைப்போல் ஏமாந்து போனவன் தான்!...அதனால் தான் அதை விற்று விடத் தீர்மானித்தேன்!...இல்லா விட்டால் பார்ப்பதற்கு இவ்வளவு அழகாகவிருக்கும் இந்தக் கடியாரத்தை விற்க யாருக்குத் தான் மனம் வரும்?...விஷயத்தை வெளியிட்டால், எனக்கும் அவமானம் உனக்கும் அவமானம்!...அதனால் தான் நான் ஏமாந்து போனதை வெளியிடவில்லை!...ஹும் நீ கொடுத்தது இரண்டு ரூபாய் தானே!...இந்தா உன் பணம்! பாக்கி ஆறு ரூபாய் என்னிடம் இருக்கிறது. நான் ஆறு ரூபாய்க்குத் தானே இதைச் சங்கரனிடமிருந்து வாங்கினேன்! ஆகவே, என்னுடைய முதல் என்னிடமிருக்கிறது. உன்னுடைய முதல் உன்னிடமிருக்கிறது!...இருவருக்கும் லாபமுமில்லை; நஷ்டமுமில்லை!...மற்ற மூவரிடத்தில் மாத்திரம் இந்த விஷயத்தைப்பற்றி வெளியிட்டு விடாதே! ரகசியமாகவிருக்கட்டும்! என்றான்.

பஞ்சுவும் பரம திருப்தியுடன் திரும்பினான்.

---

# 'என் இஷ்டம்'



[ ஏ. ஏ. ஸோமயாஜுலு பி. ஏ. ]

"உன்னைக் கேட்கவில்லை. என் இஷ்டம். நீ பேசாது போய் உன் வேலையைப்பார்" என்று உத்தண்டமான குரலில் குமாரசாமி உறுமினான். அவன் மனைவி சுப்புலக்ஷ்மி இரண்டு நிமிஷம் ஸ்தம்பித்து நின்று விட்டாள். கிருக கிருத்யத்தில் பெண்களுக்கு யோசனை சொல்லும் உரிமை கூடக் கிடையாதா? இருக்கிற நிலத்தை விற்று யாராவது வியாபாரம் நடத்துவார்களா? நிலத்திலிருந்து நிச்சயமாக வரும்படி வருகிறது; வியாபாரத்தில் லாபந்தான் கிடைக்குமென்று உறுதியாக யாராலும் சொல்ல முடியாது. ஆகையால் நிலங்களை விற்று ஜவுளி வியாபாரம் செய்ய வேண்டாமென்று சுப்புலக்ஷ்மி சொல்லிப் பார்த்தாள். குமாரசுவாமி கேட்பதாக இல்லை. நிலங்களை வாங்குவதும் விற்பதும், வியாபாரம் செய்வதும் செய்யாமலிருப்பதும் ஆண்பிள்ளைகளின் காரியம். அடுப்பங்கரையில் இருக்க வேண்டிய பெண்களுக்கு இதில் என்ன சம்பந்தம்? என்பது குமாரசுவாமியின் கக்ஷி.

தீபாவளிக்கு நான்கு மாதங்களுக்கு முன்பாக ஜவுளியெல்லாம் குமாரசுவாமி வாங்கி விட்டான்; நாட்டுபுறங்களில் யுத்தத்திற்கு முன்பாக வாங்கப்பட்டுத் தேங்கிக்கிடந்த துணிகளையெல்லாம் நயமான விலைக்கு வாங்கியதால் தீபாவளி சந்தடியில் நல்ல லாபத்திற்கு விற்கலாமென்பது அவன் கருத்து. இரண்டு ஏக்கரா பூமியை விற்றுவந்த பணத்தைக் கொண்டு வியாபாரம் செய்தால் நான்கு ஏக்கரா பூமி வாங்குவதற்குப் போதுமான பணம் வந்துவிடுமென, ஜவுளி வர்த்தகத்தில் கைதேர்ந்தவரும் எத்துணையோ கடைகளைவைத்து நடத்தி அநுபவம் பெற்றவருமான ஒரு சொல் உலகநாதப் பிள்ளை குமாரசுவாமிக்குப் போதனை செய்திருந்தார். ஒரு நல்ல இடத்தில் கடை ஆரம்பம் செய்யப்பட்டது. இரவு பகலாக கடையிலேயே குமாரசுவாமியும் உலகநாதபிள்ளையும் உட்கார்ந்து வியாபாரம் நடத்திக்கொண்டிருந்தனர். லாபத்தில் ஐந்து சத விகிதம் உலகநாதபிள்ளைக்குப் பங்குகொடுக்கக் குமாரசுவாமி ஒப்புக்கொண்டிருந்தான்.

குமாரஸ்வாமி:—இரவு பத்து மணி வரையில் கடையைத் திறந்துவைத்திருந்தும் தினம் பத்துப் பதினைந்து ரூபாவுக்கு மேல் வியாபாரமாகக் காணோமே?

உலகநாத பிள்ளை:—சுவாமிக்கு அநுபவமில்லாததால் சொல்லுகிறீர்கள். தீபாவளி அடுத்து வரும்போது இப்பொழுது யார்தான் துணி வாங்குவார்கள்?

பதில் சரியாகத்தானிருந்தது. சுப்புலக்ஷ்மி தனக்குப் புடவை வேண்டுமென்று 10 நாட்களுக்கு முன்பு கேட்டபோது தீபாவளி சீக்கிரத்தில் வருவதால் அப்பொழுது பார்த்துக்கொள்ளலாமென்று குமாரசுவாமியே பதில் சொல்லியிருக்கிறான். ஆகையால் தீபாவளிக்கு ஓரிரண்டு மாதங்களுக்கு முன்பு ஜவுளி வியாபாரம் மந்தமாகவிருப்பது நியாயமென்றே குமாரசுவாமிக்குப் பட்டது.

தீபாவளிக்குப் பத்து நாட்களுக்கு முன்பு சுவாமி அண்டு பிள்ளை கம்பெனிக்கு இருபுறத்திலும் இரண்டு கடைகள் ஆரம்பமாயின. அவற்றில் ஸ்டாண்டர்ட் துணிகள் வந்து குவிந்துவிட்டன. உலகநாதபிள்ளை வெகு அவசரமாகக் குமாரசுவாமியிடம் ஓடிவந்து கோபாவேசத்துடன் பேசலானார்:

'சுவாமி! இந்த கவர்ன்மெண்டு செய்த அநியாயத்தைப் பார்த்தீங்களா? தீபாவளிக்குப் பத்து நாளிருக்கும்போது "ஸ்டாண்டர்டு கிளாத்" கொண்டு ரொப்பிட்டாங்க. இவர்களைக் கேட்பார் கொள்ளுவார் இல்லையா?"

அருகாமையிலிருந்த ஒரு போலீஸ் கான்ஸ்டேபிள் கொஞ்சம் நாவையடக்கிப் பேசும்படி உலகநாத பிள்ளைக்கு உத்தரவு போட்டான். உலகநாத பிள்ளை உடனே சொன்னார். "கவர்ன்மெண்டை ஏதுவுஞ்சொல்லலீங்க. நம்ம படவங்க இருக்காங்களே அதிகாரிங்க, அவங்களைச் சொல்றேன். நீங்க அதுக்குள்ளெ கோபிச்சுகிட்டீங்களே"

'ஸ்டாண்டர்ட் கிளாத்' வந்து நிறைந்துவிட்ட செய்தி குமாரசுவாமியின் வயிற்றைக் கலக்கிவிட்டது. ஆனால் ஆட்கள் தலையில் துணிமூட்டைகளையேற்றித் தெருத் தெருவாய்த் துணிகளை விற்றுவிடலாமென்று உலகநாத பிள்ளை யோசனை சொன்னார். அப்படிச் செய்வதால் நம்பிபுரத்தில் 'ஸ்டாண்டர்ட் கிளாத்' விற்பனையையே தொலைத்துவிடலாமென்றும் அவர் உறுதியாகச் சொன்னார். ஆட்கள் மூட்டைகளைச் சுமந்துகொண்டு தெருத் தெருவாய் அலைந்தார்கள். போகும்போது இருந்த பளுவு திரும்பும்போது துளிக்கூடக் குறைவதில்லை! களைப்புத் தட்டுவதால் பளு அதிகரிப்பது போன்ற உணர்ச்சியும் மேலிட்டது! தீபாவளிக்கு முந்திய நாள் இரவு பிள்ளையவர்கள் ஓர் அற்புதமான யோசனை சொன்னார். வீடுவீடாகத் துணிகளைக் கடனுக்கு விற்றுவிடுவதென்பதுதான் அவருடைய போதனை. அப்படிச் செய்தும் கைவசமிருந்த சரக்குப் பூராவும் தீரவில்லை!

விடிந்தால் தீபாவளி. ராத்திரி பத்து மணிக்குக் குமாரசுவாமி நான்கு பெரிய புடவைகளுடனும் நாலைந்து ஜரிகை வேஷ்டிகளுடனும் வீட்டுக்கு வந்தான்.

"சுப்பு. உனக்காக இந்தப் பெரிய புடவைகள் நாலும் கொண்டு வந்திருக்கிறேன் பார்" என்றான். சுப்புலக்ஷ்மி புடவைகளைப் பிரித்துப்பார்த்தாள். அவ்வளவும் 'கட்டும் கடைச்' சரக்கு, எந்தக்காலத்தில் வாங்கியதோ!" என்றாள். குமாரசுவாமியும் புடவைகளைப் பார்த்தான். அவ்வளவும் பல விடங்களில் நைந்து போயிருந்தன.

தீபாவளிக்கு முந்திய நாளிரவு எந்தெந்த வீடுகளில் துணிகள் கடனுக்காகக் கொடுக்கப்பட்டனவோ அந்தந்த வீடுகளிலிருந்து துணிகள் அப்படியே திரும்பி வந்துவிட்டன. எல்லாத்

துணிகளிலும் பழுது இருப்பதைக் குமாரசுவாமியே தன் கண்ணால் பார்த்தான். தீபாவளி கழிந்த மறு தினம், தீபாவளிக்கு முந்திய நாட்களைப்போலவே கடை நிரம்பியிருந்தது. உலகநாத பிள்ளை மாத்திரம் கடைக்கு வரவில்லை. மூன்று ஏக்கரா பூமி ஒரு சிறு கடைக்குள் அகப்பட்டுக்கொண்டு திண்டாடிக் கொண்டிருந்தது!

உலகநாத பிள்ளை எங்கே யென்று விசாரணை செய்தபோது அவர் 'பிளாக் மார்க்கெட்'டில் துணி வர்த்தகம் செய்ததற்காக கைதி செய்யப்பட்டதாய் தெரிய வந்தது; தலை பிழைத்தது தம்பிரான் புண்ணியமென்று குமாரசுவாமி கடையை மூடி விட்டு ஜவுளியையெல்லாம் வீட்டுக்கு எடுத்துக்கொண்டு போய் விட்டான்.

தை மாதப் பிறப்பன்று காலையில் குமாரசுவாமி சுப்புலக்ஷ்மியிடம் "சுப்பு, புதுப் புடவை வேண்டாமோ?" என்றான்.

சுப்:—ஏன் வேண்டாம்?

குமா:—அந்த மூட்டையிருக்கிறது பார்!

சுப்புலக்ஷ்மி மூட்டையை அவிழ்த்துப் பார்த்தாள். எத்தனையோ புடவைகளிருந்தன. அவற்றுள் எதையெடுத்துக் கொள்ளலாமென்று சுப்புலக்ஷ்மி கேட்டாள்.

"உன் இஷ்டம். எல்லாப் புடவைகளும் உனக்குத்தான்!" என்றான் குமாரசுவாமி.

"இந்தப் புடவைகள் யாருக்கு வேணும்? கட்டுக்கடைச்சரக்கு" என்று சுப்புலக்ஷ்மி சொல்லி விட்டாள்.

குமாரசுவாமி ஒரு யோசனை செய்தான். தை வெள்ளிக்கிழமை சுமங்கலிப் பிரார்த்தனையும் மறு நாள் சமாராதனையும் நடத்திப் புடவைகளையும் வேஷ்டிகளையும் தானம் செய்து விட்டான்! வேறு வழி?

---




I

### பல்லவி

ஜகதீச ஸதா மாமவ பாவன ஜக ||
3 3
சரித தேவ தேவ ||
3 3

### அநுபல்லவி

ககவாஹன ஸுர சோக விபஞ்ஜன
23 4
கஞ்ஜ நாப தனு நிந்தித மனஸிஜ
4 3
விக தசமல முனி மானஸ நிவஸன
3
வேத வேத்ய கமலாத்நத பதயுக || ஜக ||
3 3 4 3

### சரணம்

1. ஸுரரிபு நிசய பயோத ஸமீர
3
ஸுந்தர தனுருசி நிந்தித மார
3 3
சரண நத ஸகல தாபவிதார
3
சாருமந்து வசன மௌக்திக ஹார
3
பரித கருணா நயநாந்த மஹேச்வர-
ர்
பாரதீசநுத திவ்யதனாலய || ஜக ||
4 3

2. கலித துடிதுபமி மோஹன சேல
3
கம்பு கண்ட துளஸி நவ மால
3 2
ஜல ஜஸமி நயன மங்கள லீல
ஸாது லோக சரணோ த்நத சைல
4 4
ஸலில ராசி சயநாம்புஜ கோமள
சரண ஹத சகட தானவ நிருபமி ॥
3

3. வதன பரிஹஸித பார்வண ஸோமி
3
வாஸுதேவரண பாதித பௌமி
4
ஹ்றதிமமி பரிலஸ ஸம்ப்நத காமி
3 4
ஹேமி மதுடயது வீரலலாமி
3
மதன ஜனக வர கௌஸ்துப விலஸித
3 4
மான்யசீல மதுஸூதன ஜய ஜய ॥ ஜக ॥
4 3

II

ஜகதீச —எல்லா உலகங்களுக்கும் ஈசனே
3
பாவந சரித —பரிசுத்தமான சரித்திரங்களுள்ளவனே (பகவானுடைய சரித்திரத்தைக் கேட்டமாத்திரத்தில் ஸகலவிதமான பாபங்களையும் போக்கடிப்பவன்)
தேவ தேவ —தேவர்களுக்கெல்லாம் தேவனே
3 3
ஸதா —எக்காலத்தும்
மாம் அவ —என்னைக் காப்பாற்றுவாய்.
கக வாஹந —பக்ஷிராஜனை வாஹனமாயுடையவனே
2 3
ஸுர சோகவிபஞ்சன —தேவர்களுடைய சோகத்தைத் தவிர்ப்பவனே
4
தநுநிந்தித மநஸிஜ —மன்மதனைக்காட்டிலும் சௌந்தர்யமுள்ள [வனே
3
கஞ்ஜநாப —பத்மநாபனே
4
விகத சமல முநி மானஸ நிவஸந —பாபமற்ற முனிவர்களுடைய மனத்தாமரை [யில் வாஸம் செய்கிறவனே
3
வேத வேத்ய —வேதங்களால் அறியத்தகுந்தவனே
3 3
கமலா த்ருத பதயுக —லக்ஷ்மீதேவியால் பிடிக்கப்பட்ட பாதங்களோடுகூடியவனே (என்னைக் காப்பாற்றுவா [யாக)
4 3 3

| | |
|---|---|
| 1. ஸுர ரிபுநிசயபயோ தஸமீர<br>3 | —அசுரர்களான மேகத்திற்கு காற்றுபோல் [உள்ளவனே |
| ஸுந்தர தநுருசி நிந்திதமார<br>3 3 | —மாரனைக்காட்டிலும் மனோஹரனே |
| சரணநதஸகல தாப விதார<br>3 | —பாதங்களில் வந்து வணங்கும் ஜனங்களின் [எல்லா தாபங்களையும் தவிர்ப்பவனே |
| சாரு ம்ருது வசந<br>3 | —எழிலுள்ளதும் ம்ருதுவானதுமான மொழிகள் [உள்ளவனே |
| மௌக்திக ஹார | —முத்து மாலைகள் அணிந்தவனே |
| பரித கருணா நயநாந்த<br>4 | —கருணைபொழியும் கடைக்கண்கள் உள்ளவனே |
| மஹேச்வர, பாரதிச நுத<br>4 | —சிவன், பிரமன் இவரால் துதிக்கப்படுகின்ற [வனே |
| திவ்ய குணாலய<br>3 | —நற்குணங்களுக்கு இருப்பிடமே (என்னைக் [காப்பாற்றுவாயாக |
| 2. கலித தடிதுபம மோஹந சேல<br>3 | —மின்னலுக்கு துல்யமான வஸ்திரம் அணிந்த [வனே |
| கம்பு கண்ட<br>3 2 | —சங்குபோன்ற கழுத்தில் |
| துளஸீ வநமால | —துளஸீ வனமாலையை யணிந்தவனே |
| ஜல ஜஸம நயந | —தாமரை இதழ்போல் நீண்ட கண்கள் உடைய [வனே |
| மங்கள லீல | —மங்களந்தரும் லீலைகள் செய்தவனே |
| ஸாது லோக சரணோத்ருத சைல<br>3 | —சாதுக்களான கோபர்களை ரக்ஷிப்பதற்காக [கோவர்த்தனத்தை குடையாக எடுத்தவனே |
| ஸலிலராசி சயந | —க்ஷீராப்தியில் யோகநித்திரை செய்பவனே |
| அம்புஜ கோமள சரண ஹத சகடதா நவ<br>3 3 | —தாமரைபோல் அழகுவாய்ந்த சரணங் [களால் சகடாசுரனைக் கொன்றவனே |
| நிருபம | —தனக்கு உவமையில்லாதவனே (என்னை ரக்ஷிப்பாயாக) |
| 3. வதந பரிஹஸித பார்வண ஸோம | —பூர்ண சந்திரனைப் பழிக்கும் முககாந்தியுள்ள [வனே |
| வாஸு தேவ<br>3 | —எல்லா வஸ்துக்களிலும் வசிப்பவனே |
| ரண பாதித பௌம<br>1 4 | —நரகாசுரனை யுத்தத்தில் நாசம் செய்தவனே |
| ஸம்ப்ருத காம<br>4 | —எல்லா ஆசைகளுக்கும் இருப்பிடமே |
| ஹேம மகுட | —ஸுவர்ணமிழைத்த கிரீடம் தரித்தவனே |
| யது வீரலலாம<br>3 | —யதுகுல வீரர்களுக்குள் சிரேஷ்டமானவனே |
| மத நஜ நக<br>3 | —மார ஜனகனே |
| வர கௌஸ்துப விலஸித<br>4 | —உயர்ந்த கௌஸ்துபம் என்ற மணியை [மார்பில் அணிந்தவனே |
| மாந்ய சீல | —போற்றற்குரிய ஒழுக்கமுடையோனே |
| மம ஹ்ருதி<br>3 | —என் மனதில் |
| பரிலஸ | —விளங்குவாய் |
| மது ஸூதந<br>4 3 | — 'மது' என்ற அசுரனைக் கொன்றவனே |
| ஜய ஜய | —போற்றி போற்றி (விளங்குவாயாக) |

# பிழைக்கத் தெரிந்தவன்!



"ராஜன்"

என் தகப்பனார் ஒரு வில்லேஜ் - கர்ணம்! அவர் ஜமா பந்திக்காகக் கணக்குகள் எழுதிக்கொண்டிருந்தார். எப்போதும் ஜமா பந்தியென்றால் என் தகப்பனாருக்கு ஓய்வு ஒழிவு ஏற்படாது. மேலும் அவர் ஒரு முன் கோபி. ஆகவே அவர் வாயில் திண்ணையில் கணக்கு எழுதிக் கொண்டிருந்தால் நாங்கள் புழக்கடைத் தோட்டத்திற்குச் சென்று விடுவோம். அவரிடம் எங்களுக்கு அவ்வளவு பயம்!

"ஐயா! புண்ணியாத்துமாவே! கட்டிக்கொள்ள ஒரு துணிகூட இல்லீங்க; எஜமானே! மானத்தைக் காப்பாற்றிக் கொள்ள ஒரு துணி கொடுங்க, சாமி!..." என்று ஒரு பிச்சைக்காரன் எங்கள் வீட்டு வாயிலில் நின்று கொண்டு கெஞ்சினான்.

"போடா!...திருட்டுப் பசங்கள்! பிழைக்க வழி தெரியாமல் வந்து நிற்கிறதுகள்!...ஏண்டா நிக்கிறே? போடா" என்று விரட்டினார் என் தகப்பனார்.

"சாமி! எஜமான்களெல்லாம் இப்படி சொன்னால் நாங்கள் எப்படி சாமி பிழைக்கிறது?" என்றான் அப்பிச்சைக்காரன்.

"போங்கடா! ஒரே கலாட்டாவா போச்சு! பிழைக்க வழி தெரியாமல் வந்து நிற்கிறான் தடியன்!...ஏது உன்னண்டை பெரிய தொந்தரவாய்ப் போச்சு! போடான்னா......" என்று அதட்டினார் என் தகப்பனார். பாவம் அவன் மறுமொழி பேசாமல் போய் விட்டான்.

பிச்சைக்கு வந்த பிச்சைக்காரனைப் பிழைக்க வழி தெரியாதவன் என்கிறாரே அவர், அவன் தான் பிழைக்கவல்லவா பிச்சை எடுக்க வந்தான்? பின் பிழைக்க வழி தெரிந்தவன் தான் யார்?

* * * *

"சுப்ரமணியா! முருகா!...குகா! ...அப்பா கவலைப்படாதே! உன் குடும்பம் பெருகப் போகிறது!." என்று கூறிக்கொண்டே உள்ளே நுழைந்தார் ஒரு சாமியார்! இப்போது இருக்கிறதே போதாதா? இதுவே ஒரு சைனியம் மாதிரியல்லவா இருக்கிறது! என்று நினைத்தேன். இப்போது தான் என் தகப்பனார் அவரை ஏறிட்டுப் பார்த்தார். சாமியாரின் மரமிதியடிகள் 'டக், டக்' கென்று ஒலிக்கக் கம்பீரமாக நடந்து வந்து என் தகப்பனார் அமர்ந்திருந்த திண்ணைக்கு எதிர்த்த திண்ணையில் அமர்ந்தார். அவர் சாமியார் என்பதற்கடையாளமாக மொட்டைத் தலை, காவி உடை மற்றும் இரண்டு அங்குல நீளமுள்ள தாடி! கையில் ஒரு பை இருந்தது. அதில் என்ன என்ன இருந்தனவோ ஆண்டவனுக்குத் தான் வெளிச்சம்!

"ஏக்கமுடன் இருப்பானேன்? கவலையை யொழி; உன்னைத் திருமகள் அடைய நன்னாளை எதிர்நோக்கிறாள். துக்க இருள் அகன்று இன்பச் சுடர் வீசும். அப்போது உன் கை மேலோங்கும்!..." என்றார் சாமியார். (நான் என்ன சொல்லுகின்றேன் என்றால் அவர் கை மேலோங்காது; என் கைதான் மேலோங்கும்! எப்படி என்றால் இவன் கழுத்தில் கையை வைத்து வெளியில் தள்ள வேண்டுமென்றால் என் கை மேலோங்கத் தானே வேண்டும்?)

"உனக்குக் கீர்த்தியும், புகழும் வெகு சீக்கிரத்தில் கிடைக்கப் போகிறது! அத்துடன் உனக்கு நல்லபெயரும் வரப் போகிறது." என்றாரவர். என் தகப்பனாருக்குத் தொட்டிலிட்டு நாமகரணம் செய்தது இவருக்குத் தெரியாதுபோலிருக்கு! அதனால் தான் நாமகரணம் செய்யப் பார்க்கிறார்?

"ஏன், நான் வீணாக முகஸ்துதிக்காகக் கூறுகிறேன் என்று நினைக்கிறீர்களா?...இல்லையில்லை; நீங்கள் நெற்றியை சுருக்குவதிலிருந்து உம்முள் ஆழ்ந்து கிடக்கும் சந்தேகம் வெளியாகிறது; நீங்கள் என்னைச் சந்தேகிக்கிறீர் என்று நன்கு தெரிகிறது! என் மகிமை உனக்கெப்படி தெரியும்? மாயைத் திரை விலகினால் நீ என்னை அறிவாய். ஆகவே இப்பிரசாதத்தை நெற்றியிலணிந்து கொள்! மாயை விலகும்; உண்மை விளங்கும்!" என்று சொல்லி பக்கத்திலிருந்த சுவரிலிருந்து சுண்ணாம்பை யெடுத்துக் கொடுத்தார். 'முகர்ந்து பார்; இதுதான் முருகனின் பிரசாதம்' என்றார். என்னிடமும் சிறிது கொடுத்தார். முகர்



ந்து பார்த்தேன்: அப்பப்பா! என்ன வாசனை! பழனி விபூதியின் நறுமணம் அப்படியே 'கம்' மென்று அடித்தது!

"சரி, நீங்கள் எங்கிருந்து வருகிறீர்கள்?" என்றேன் நான்.

"திருவண்ணமலையிலிருந்து..." என்றார் சாமியார்.

"திருவண்ணமலையில் காலரா என்று கேள்வி. நீங்கள் அவ்விடத்திலிருந்து வருவதனால் உங்களால் இங்கும் காலரா பரவ ஏதுவாகும்: ஆதலால் தாங்கள்..........."

"யோசித்துச் சொல்: நானிருப்பது திருவண்ணமலை: ஆனால் நான் இப்போது கோயம்புத்தூரிலிருந்து வருகிறேன்."

"உங்கள் குரு மிகவும் நன்றாக உபதேசித்திருக்கிறார்......"

"எங்கள் குரு மஹா உத்தமர்: கடைந்தெடுத்த......"

"..முட்டாள்!" என்றேன் நான். 'சரி போடா உள்ளே' என்றார் என் தகப்பனார். எனக்கு ஆத்திரம் தாங்க முடியவில்லை. "போ வெளியே! முட்டாள்! உம்...போ!" என்று சாமியாரைப் பார்த்து வெறி பிடித்தவன் போல் கத்தினேன். என் தகப்பனார் எழுந்தார். அவன் கழுத்தில் கையை வைத்துத் தள்ளுவார் என்றெண்ணினேன். ஆனால் அதற்குமாறாகப் பாணத்தை என்மேல் பிரயோகித்து விட்டார்!

* * * *

"நான் குரு பூஜை செய்ய உத்தேசித்திருக்கிறேன். அதன் பொருட்டுத் தங்களிடம் ஏதாவது காணிக்கை பெறும் பொருட்டு இங்கு வந்தது என் தவறு. ஏதாவது உதவுவீர் என்றெண்ணினேன்; எண்ணியதன் பலனாக வசைமாலை கிடைக்கப் பெற்றேன். ஆனால் குரு நிந்தனை உம்மை லேசில்விடாது!..." என்று பலவாறாகச் சொல்லி ஒரு ரூபாய் காணிக்கை பெற்றாராம்! பின்னால் ரேகை சாஸ்திரம் பார்ப்பதாகச் சொல்லி ஒரு வஸ்திரம் தானமாகப் பெற்றாராம்! அதன் பின்னால் அவர் என்ன சொன்னாரோ தெரியாது; என் தகப்பனார் ஒரு படி அரிசியைக் கொணர்ந்து அவர் துணியில் போட்டார்!! அச்சாமியார் மூட்டையைக் கட்டிக்கொண்டு கிளம்புகிற அச்சமயத்தில் நான் என் கோஷ்டியுடன் உள்ளே புகுந்தேன்.

* * * *

"டேய் சம்பத்து! இவன் தானே; நன்றாகப் பார்" என்றான் மூர்த்தி.

"சரியாத் தெரியல்லையே; பார்த்தால் வேஷம் தடபுடலாயிருக்கு; எதற்கும் சரஸ்வதியைக் கூப்பிடுவோம்" என்றான் சம்பத்து. சரசு விழுந்தடித்துக் கொண்டு ஓடி வந்தாள்.

"சரசு இவன்தானா என்று பார்!......முழிக்கிற முழியைப் பாருடா; இவன்தான் கையை வச்சிருக்கணும் என்று நினைக்கிறேன்."

சரசு:—"அண்ணா! முகம் இன்னதாட்ட மாத்தான் இருந்தது! ஆனால் காவி உடையில்லையே! அண்ணா! அங்கே பார்! அவன் பாதத்திலே அடி! நான் அவன் ஓடும்போது கல்லை விட்டெறிந்தேன் என்று சொன்னேனல்லவா? அதுதான் அண்ணா அது! இவன்தான் அண்ணா என் செயினை அறுத்துக் கொண்டு போனது!" என்றாள்.

"அட பாவிகளா! யாரைச் சந்தேகிக்கிறீர்கள்? பாலகள், என்று அறிய சக்தியில்லா பதர்களே! குரு பழிக்கு ஆளாகாதீர்கள்!" என்றார் அந்த சாமியார்! அதற்குள் சரசு இவன் பொய் சொல்றான் அண்ணா: இவன்தான் அண்ணா



## —லீவ் அவசியமில்லை—



டாக்டர்:—ஸார் உங்களுக்கு 'ரெஸ்டு' தான் தேவை. மத்தியானத்திலே நன்னா தூங்கினா தேவலை. அதனாலே ஒரு ஆறுமாசம் ஆபீஸ்லே லீவ் எடுத்துண்டா நல்லது......

"லீவு எடுக்கணுங்கிற அவசியமில்லை. நான் பள்ளிக்கூட வாத்தியார் தான்" டாக்டர்!

திருடினது'' என்றாள். இதற்கு மேல் தன் சாமர்த்தியத்தைக் காண்பிக்காமல் விட்டு விடுவாளு பீமசேனனுன மூர்த்தி.

"உனக்குக் குரு வேறே அழுகிறதாடா!'' என்று சொல்லி விட்டான் ஒரு அறை! அவ்வளவு தான்! அப்படியே கீழே சாய்ந்தார் சாமியார்! அவருடைய கையிலிருந்த பை கீழே விழுந்தது. அதிலிருந்து சிறிய டப்பாக்களும், சீசாக்களும் விழுந்தன. அத்தர், புனுகு முதலியவற்றின் வாசனை 'ஜில்'லென்று எங்கும் வீசி அடித்தது. கீழே விழுந்த அதிர்ச்சியில் ஒரு டப்பா உருண்டோட அதன் மூடி திறந்தது. அதிலிருந்து ஒரு பொன் சங்கலி வெளியே வந்து விழுந்தது! உடனே சரசு அந்த சங்கலியை எடுத்து, "பார்த்தாயா அண்ணு என்றாள்!'' கீழே விழுந்த போலி சாமியார் விழுந்தவர் தான்!

"அப்பா, யோக்கியதையை பார்த்தாயா? நேற்று ராத்திரி பொன் சங்கலியைத் திருடிக் கொண்டு வந்திருக்கிறன். இங்கே அவனுக்குக் காணிக்கை, வஸ்திர தானம், பிக்ஷை இத்தனையும் நடந்திருக்கு! இந்த பஞ்ச காலத்திலே'' என்றேன் நான்.

"அயோக்கியப்பயல்! ஏமாத்தியாவிட்டான்! என்னடா திருட்டுப் பிழைப்பு வேண்டியிருக்கு?'' என்ருர் என் தகப்பனுர்.

"இவன் தானப்பா பிழைக்கிற மனிதன்!'' என்றேன் நான்.

"அயோக்கியத்தனமாகப் பிழைப்பது ஒரு பிழைப்பாக்கம்? வரட்டு தடியன்!'' என்ருர்.

"ஆமாம்! 'அப்பா, ஆயா!' என்று கெஞ்சினுல் கொடுப்பேளோ? இவன் வருவதற்கு முன்னுல் ஒரு பிச்சைக்காரன் வந்து கேட்டானே அதற்கு என்ன சொன்னீர்கள்? ஞாயமாக நடந்துகொள்ளுகிருன் இல்லையா? 'திருட்டுப் பசங்கள்: பிழைக்க வழி தெரியாமல் வந்து நிற்கிறதுகள்' என்று சொல்லவில்லையா? உண்மையில் அவன் பிழைக்கத் தெரியாதவன் தான்! இந்த போலி சாமியார் தான் பிழைக்கத் தெரிந்த மனிதன்!'' என்றேன்.

---




நீலம்

சாரீர நிலைமை சௌகர்யமாகவும்குறைவுள்ளதாயும் இருக்கும் சமயங்களில் அதில் புகுந்து வெளிப்படும் சாதாரண சங்கதிகளும், பிடிகளும்கூடத் தனி அழகு பெறும் என்பது கண்கூடு. நல்ல மனோதர்மம், கற்பனை, ஞான பாவம் இவை அனைத்துமிருந்து சுகமான சாரீர ஓட்டம் இல்லாது போகுமாயின் அப்பாட்டுப் போதிய அளவில் திருப்திகரமாக உருக்கொள்வதில்லையென்பதும் அனுபவம். இந்த இரண்டு அம்சங்களையும் ஏக காலத்தில் கவனிக்கும்படியான சந்தர்ப்பம் சென்ற சனிக்கிழமையன்று திருவல்லிக்கேணி ஸ்ரீ தியாகராஜஸ்வாமி சபையில் கிடைத்தது. அன்று ஸ்ரீமதி கே. பி. சுந்தராம்பாள், ஸ்ரீமான்கள் ஆர். கே. வெங்கட்ராம சாஸ்திரி-பிடில்; ராமநாதபுரம் ஈச்வரன்-மிருதங்கம் இவர்களைப் பக்க வாத்தியமாகக் கொண்டு கச்சேரி செய்தார். முதல் 2, 3 உருப்படிகள் பாடும் வரையில் அவரது மனப்போக்குக்கு இசைந்த வகையில் சாரீரம் ஒத்துழைக்க மறுப்பது போல் காணப்பட்டதாயினும் சிறிது சிறிதாக சூடு ஏறி அது பக்குவமடைந்தது. உதாரணமாக ஸ்ரீமதி கே. பி. சுந்தராம்பாள் மோஹன ராக ஆலாபனையைக் குறிப்பிடலாம். அந்த ராகத்தின் சகல இடங்களிலும் அவர் ஸஞ்சாரம் செய்தார். அது முதற்கொண்டு தான் கச்சேரியே துவங்கியது என வேண்டும். உள்ளத்தில் உருப்படும் அபிப்ராயங்களையெல்லாம் தங்கு தடையின்றி வெளியிட முடிகிறது என்ற உணர்ச்சியும் தன்னம்பிக்கையும் ஏற்படும்போது உற்சாகம் தானே மூளுவது சகஜம். எனவே ஸ்ரீமதி சுந்தராம்பாளிடம் காணப்பட்ட உற்சாகம் அவர் பாடிய பாட்டுக்களில் எல்லாம் பிரதிபலித்தது. ஸ்ரீமதி சுந்தராம்பாளின் பாட்டு சாஸ்திரீயமான பாட்டையில் திரும்பி வருஷங்கள் பலவாகின்றன. அத்துறையில் அவர் வெகுவாக ஊக்கம் செலுத்தத் தலைப்பட்டு உழைத்து வருகிறார். தெளிவாகக் கணீரென்று கேட்கும் தமது சாரீரத்தை ஆதாரமாகக் கொண்டு மேடைக் கச்சேரிக்கு ஏற்ற மாதிரியில் அவர் அதைப் பண்படுத்தி கொண்டும் வருகிறார். மேல் ஸ்தாயிகளில் அவர் பாடும்போது பிரயோகமாகும் அசைப்புகளையும், பிர்க்காக்களையும்போல கீழ் ஸ்தாயிகளில் பாடுகையில் அவ்வளவாக எடுபடாமல் இருக்கிறதென்று மாத்திரம் ரஸிகர்கள் எண்ணக்கூடும். ஆயினும் அந்த அம்சத்தையும்அவர் தம்பயிற்சி மூலம் சரிப்படுத்திக்கொண்டு விடுவது சாத்தியம்தான்.



ஸ்ரீமதி சுந்தராம்பாள் அன்றைய கச்சேரியில் பாடிய உருப்படிகளெல்லாம் ரஸிகர்களுக்குத் திருப்தி தந்தன வென்றாலும் அவர் பாடிய ராகமாலிகையை விசேஷமாகக் குறிப்பிட வேண்டும். பிலஹரி, ஸாவேரி, வராளி, காபி, நீலாம்பரி, கானடா, பூபாளம், ஷண்முகப் பிரியா ஆகிய ராகங்களை அவர் ராகமாலிகையில் பாடினார். காபி ராகத்தில் சில சுகமான இடங்களை அவர் பிரயோகித்தார்.

அன்னை கஸ்தூரி பாயைப் பற்றி அவர் பாடிய பாட்டைக் கேட்டு ரஸிகர்கள் பரவசமடைந்தனர்.

ஸ்ரீமான் ஆர். கே. வெங்கட்ராம சாஸ்திரியார் முகாரி ராகத்தில் அதன் ஜீவகளை ஒவ்வொரு இடத்திலும் ததும்பும் வண்ணம் வாசித்ததை முக்கியமாகக் குறிப்பிட வேண்டும்.




(வ.ரா.)

## அத்தியாயம் 26

சூரி இன்னும் தஞ்சாவூருக்குப் போகவில்லை. ஆனால், ஆரிய சமாஜ முறையில், சென்னையிலேயே, அவன் நாகம்மாளை கலியாணம் செய்து கொண்டான். கலியாணம் அடக்கமாகவும் அமரிக்கையுடனும் நடந்தது. கலியாணத்துக்கு ஒரு சில நண்பர்கள் தான் பிரசன்னமாயிருந்தார்கள். சூரிக்கும் சாம்புவுக்கும் சென்னையிலே தெரிந்தவர்கள் நூற்றுக்கணக்கானவர்கள். அவர்களில் பெரும்பான்மையோருக்கு, சூரியும் சாம்புவும் அழைப்புக் கடிதம் அனுப்பியிருந்தார்கள். ஆனால் வந்தவர்கள் சிலர்தான்.

அப்பொழுதுதான் சூரிக்கும் சாம்புவுக்கும் நண்பர்களின் மனநிலை தெளிவாயிற்று. கிருஸ்தவர்கள், முஸ்லிம்கள் நண்பர்களாயிருந்து, அவர்கள் விருந்துக்கழைத்தால் போகத் தயாராயிருக்கும் ஹிந்துக்களின் வேடிக்கை மனப்பான்மையைக் கண்டு, நண்பர்கள் வியப்படைந்தார்கள். வாழையடி வாழையாக வந்த திருக்கூட்டமல்லவா இது! என்று சூரி கேலி செய்தான். 'நாம் சாப்பாட்டுக்குக்கூட அழைக்கவில்லையே! கலியாண காலத்தில் பிரசன்னமாயிருப்பதற்கு மட்டும் தான் அழைப்பு அனுப்பினோம். வெள்ளைக்காரர்களின் கலியாணத்துக்கு விரைந்து செல்லும் இந்த அன்பர்கள், அன்றைக்கு, கலியாணம் நடக்கிற இடத்தில் காலடிகூட வைக்கமாட்டேன் என்று விட்டார்களே! என்ன கோழைகள்! என்ன வேஷதாரிகள், என்று சாம்பு வருத்தத்தோடு சொன்னான்.

'சாம்பு! இவர்கள் எல்லாரும் ஏழைகள், கோழைகள். இவர்கள் எல்லாரும் பணத்துக்கு விழுந்து விழுந்து சலாம் செய்வார்கள். அதிகாரிகளைக் கண்டால், சாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்வார்கள். வெள்ளைக்காரர்களிடமோ, இவர்கள், நாய்களைப் போல, வாலைக் குழைத்துக் கொண்டு நிற்பார்கள். இவர்களுக்கு சொந்த புத்தியும் கிடையாது; பிறருடைய புத்தியையும் கேட்க மாட்டார்கள். மதம் என்றும் பக்தி என்றும் பஜனை செய்வார்களேயல்லாமல், அதை அனுஷ்டானத்துக்கு கொண்டு வரமாட்டார்கள். குறைந்த உழைப்பும் நிறைந்த ஊதியமும் இவர்களுடைய விருப்பம். இந்தமாதிரி ஜனங்கள் தான் ஹிந்து சமாஜத்தை பெரும்பான்மையாக அலங்கரித்து வருகிறார்கள்' என்று சூரி, வழக்கம்போல படபடத்துப் பேசினான்.

'எதற்காக இவர்கள் பயப்படவேண்டும்? என்பது தெரியவில்லை. அல்லாப் பண்டிகை வேடிக்கையைப் பார்க்கப் போகும் ஹிந்துக்கள் முஸ்லிம்களாக ஆவிடுவார்களா அல்லது ஆகிவிட்டார்களா? ஒரு நண்பன் யாரைக் கலியாணம் செய்துகொண்டால் என்ன? அந்த சம்பவத்தில் இவர்கள் ஏன் கலந்துகொள்ளக்கூடாது? இவ்வளவு பயமும் பாசாங்கும் நிறைந்து கிடக்கும் இவர்களுடைய உள்ளத்தை எப்படி மாற்றுவது என்பது தான் தற்போதைய கேள்வி' என்றான் சாம்பு.

'இவர்கள் மகாப்பெரிய மனிதர்கள்? இவர்களுடைய மனதை வேறு மாற்ற வேண்டுமோ? இவர்கள் அசடுகளாக வாழ்வதால், யாருக்கு நஷ்டம்? அவர்களுக்குத்தானே? இப்பேர்ப்பட்ட மகா மட்டிகளுடைய ஒத்தாசையாலும் ஒத்துழைப்பாலும் ஆயிரம் யானையின் பலம் வந்து விடப்போகிறதோ? சரிதான், சாம்பு! இவர்களையெல்லாம் குப்பையோடு குப்பையாக சேர்த்து, மனசிலே வைத்துக்கொள்ள வேண்டியது தான்' என்றான் சூரி.

'நீ சொல்வது ஒரு விதத்தில் உண்மைதான். ஆனால், உண்மையாகவும் தீவிரமாகவும் கட்டுப்பாடான முயற்சி, கல்வித்துறையிலும் மற்ற துறைகளிலும் இதுவரையிலும் ஏற்படாததால், ஹிந்து சமாஜத்துக்குள்ளாகவே, பல சிறப்பட்ட மனிதர்கள் இருக்கிறார்கள். பலர் ஜடப்பொருள்களாகவாழ்கிறார்கள். பலர் தங்கள் புத்தியை



'அந்த வேலை உன்னைச் சேர்ந்தது' என்று சூரி பேச்சை முடித்து விட்டான்.

கேவலமான முறையில் வீற்று வயிறு பிழைக்கிருர்கள். செய்வது இன்னதுதான் என்று தெரிந்து கொள்ள முடியாமல், பலர் தவித்துத் தத்தளிக்கின்ருர்கள். பொதுவாக, எல்லாருமே, தங்கள் மூளையை உபயோகித்து, சிறு காரியம் கூட செய்யமாட்டேன் என்கிருர்கள். இவர்கள் தான் ஹிந்து சமாஜத்தில் பெரும்பான்மையாக இப்பொழுது இருந்து வருகிருர்கள். இவர்களை முன்னுக்கு கொண்டுவந்தால் தான் சமாஜம் முற்போக்கு அடையும்' என்று சாம்பு சொன்னுன்.

'அந்த வேலை உன்னைச் சேர்ந்தது' என்று சூரி பேச்சை முடித்து விட்டான்.

இந்த சம்பாஷணை நடந்து சில நாட்கள் இருக்கும். சாம்புவின் பள்ளிக்கூடத்தில் வருஷாந்திரக் கொண்டாட்டம் நடைபெற்றது. சாம்பு இங்கிலீஷ் பேசுவதில் மிக சாமர்த்திய சாலி என்பது பிரசித்தம். அந்த கொண்டாட்ட வைபவத்தில், 'நமது முற்போக்கு' என்பதைப்பற்றி, சாம்புவை பேசும்படியாக ஏற்பாடு செய்திருந்தார்கள். சென்னை ஹைக்கோர்ட் நீதிபதி ஒருவர், அன்று தலைமை வகித்தார். அவர் கடுமையான வைதீகர்.

கொண்டாட்ட தினத்தன்று, சாம்புவின் பேச்சைக் கேட்க, நூற்றுக் கணக்கானவர்கள் சென்னையின் பல பகுதிகளிலிருந்தும் வந்திருந்தார்கள். சூரியும் வந்திருந்தான். கொண்டாட்ட சமயம் நெருங்கியது. கூட்டத்தில், ஆயிரம் பேர்களுக்கு அதிகமாக இருந்திருப்பார்கள். துபாஷ் முதலியாருக்கு, இந்தப் பள்ளிக்கூடத்தில் சலுகையும் செல்வாக்கும் கொஞ்சம் ஜாஸ்தி என்று மீண்டுமொரு தடவை சொல்ல வேண்டுமா? அவரும் வந்திருந்தார்.

அக்கிராசனர் தமது தலைமை உரையில், நவீன நாகரிகம் பொய்யென்றும் ஹிந்துக்களின் புராதன பழக்க வழக்கங்கள்தான் சத்தும் சாசுவதமும் கொண்டவை என்றும், பரலோக வாழ்க்கைதான் பிராதான்யம் என்றும் உலகத்தில் எவையும் நிலைத்து நிற்காத தன்மை கொண்டவைகள் என்றும் விதியை யாரும் வெல்ல முடியாது என்றும் மனிதனுல் எதையும் செய்ய முடியாது என்றும் அவன் அணுக் கூட்டத்தில் ஒரு சிறிய அணு என்றும் தெய்வ சங்கற்பப் படிக்குத்தான் எல்லாம் நடைபெறும் என்றும் சொல்லிவிட்டு, 'இன்றைய தினம் பிரசங்கம் செய்யப் போகிற நண்பர் இங்கிலீஷில் அபார பாண்டியத்தியம் உள்ளவர் என்று கேள்விப்படுகிறேன். நமது முற்போக்கைப் பற்றி, அவர் என்ன சொல்லப் போகிருரோ, அது எனக்குத் தெரியாது. அவர் எதைச் சொன்னுலும் பொறுமையுடன் இருக்க வேண்டும் என்று உங்களை கேட்டுக் கொள்ளுகிறேன்' என்று பேசி, உட்கார்ந்தார்.

சாம்பு எழுந்திருந்தான். நண்பர்களும் மற்றவர்களும் கலகலவென்று கைதட்டி அவனை உற்சாகப்படுத்தினுர்கள். அருமையான இங்கிலீஷ் கேட்கலாம் என்று எல்லோரும் எதிர்பார்த்திருந்தனர். ஆனல் சாம்புவோ, வெடிகுண்டு போட்டதைப் போல ஒன்று செய்தான். அவன் தமிழில் பேச ஆரம்பித்தான். அக்கிராசனருக்கு ஆச்சரியம். 'இன்றைக்கு இங்கிலீஷில் பிரசங்கம் என்றல்லவா எண்ணி, நான் தலைமைப் பதவியை ஏற்றுக் கொண்டேன்' என்று பள்ளிக்கூட நிர்வாகியைக் கூப்பிட்டு அவருடைய காதில் முணுமுணுத்தார். அத்தோடு நிற்காமல், 'பிரசங்கி அவர்களுக்கு ஒரு வார்த்தை. நீங்கள் இங்கிலீஷில் பேசினுல் நலமாயிருக்கும்' என்று சாம்புவைப் பார்த்து கேட்டுக்கொண்டார்.

சாம்பு சொன்னதாவது:— 'அன்பர்களே! என்னை இங்கிலீஷில் பேசுமாறு தலைவர் கட்டளையிடுகிருர். எனக்கு தமிழில் பேசத்தான் ஆசை. உங்களுடைய விருப்பமும் அப்படித்தான் இருக்கும் என்று எதிர்பார்க்கிறேன்.'

இவ்வாறு சாம்பு பேசியதும், அதற்கு சபையார் ஆதரவும் அளிக்கவில்லை; அதை எதிர்க்கவும் இல்லை. ஆகவே, தமிழிலேயே பேசுவது என்று சாம்பு தீர்மானம் கொண்டான்.

சாம்பு மேலும் கூறியதாவது:—'இங்கிலீஷ் பாஷை மிகச் சிறந்த பாஷை என்பதில் சந்தேகமில்லை. தற்போதைய நிலைமையில், தமிழ் இங்கிலீஷோடு பேர் சொல்ல முடியாது என்பதும் உண்மை. இங்கே கூடியிருப்பவர்களில் பலர், நான் இங்கிலீஷ் பேசி கேட்டிருக்கிறார்கள். ஆனால் நான் தமிழ் பேசி கேட்டதே இல்லை. எனக்கும் தமிழ் மறந்துபோய் விட்டதோ என்ற பயமும் வந்து விட்டது. என்ன இருந்தாலும் தமிழ் நம்மவர்களின் பாஷை. அதைப் பேசுவதில், நாம் ஏன் அவமானப்பட வேண்டும்? அல்லது பயப்பட வேண்டும்? சொந்த வீடு குச்சு வீடு என்ற காரணத்தால், மனக்கிலேசப்பட்டுக் கொண்டு, அழகான வாடகை பங்களாவில் வாழவேண்டும் என்று எண்ணுபவர்களின் மனப்போக்கு எனக்கு பிடிக்கவில்லை. (சூரி, கேளுங்கள் கேளுங்கள் என்று ஆரவாரம் செய்தான்.)

'தலைவர், முன்னுரையாகச் சொன்னவைகளில் எதையும் ஏற்றுக்கொள்ளமுடியாத நிலைமையில் இருக்கிறேன். எனக்கு விதியில் நம்பிக்கை இல்லை; உழைப்பில் தான் நம்பிக்கை. முற்போக்கு என்பது உழைப்பால் தான் ஏற்படக்கூடியது. அது விதியாலும் அதிருஷ்டவசத்தாலும் கிடைக்கக்கூடிய பொருள் அல்ல. அறிவினால் தான் முற்போக்கு ஏற்படமுடியும். ஆகவே, எனக்கு ஸயன்ஸில் தான் நம்பிக்கை. அறிவில்லாமலும் ஸயன்ஸ் துளிக்கூட தெரியாமலும் வாழும் மாந்தர்களிடையே மூட பக்தியைத் தான் காணமுடியும்.

'ஹிந்துக்களின் புராதன பழக்க வழக்கங்கள் தான் சத்தும் சாசுவதத் தன்மையும் கொண்டவை என்று தலைவர் சொன்னார். கர்ம பலன் தான் வாழ்க்கைக்கு வழி காட்டி என்ற அற்புதமான கொள்கையை கொண்டிருந்த ஹிந்துக்கள், விதி என்பதில் எப்பொழுது நம்பிக்கை கொள்ளத் தலைப்பட்டார்களோ, அது தான் தெரியவில்லை. விதியை நம்பினதும், நம்மவர்களின் தலைவிதியும் பாழாகப் போய்விட்டது. (சூரி—சபாஷ்)

'விதியை வென்ற மார்க்கண்டேயன் கதை, நம் நாட்டுப் பொக்கிஷமாகும். விதியைக் காட்டிலும் மதிதான் பெரிது. இதைப்பற்றி யாருக்கும் சந்தேகமே தேவையில்லை. விதி உண்மையாயின், அந்த விதியை யார் படைத்தது? மனிதர்கள் இப்படித்தான் இருக்க வேண்டும் என்றும் தனி மனிதனுடைய வாழ்க்கை விதியை அனுசரித்துத்தான் இயலும் என்றும் சொல்லுவது விதண்டா வாதமாகும். அது வெறும் கற்பனையாகும்.

'இந்த நாட்டுப் புராணங்களை எடுத்துக்கொள்ளுவோம். மனிதன் தேவேந்திரப்பதவியை அடைந்தான் என்ற கதைகள் அநேகம். இதற்கு என்ன அர்த்தம்? மனிதன் தேவனாக ஆக முடியும் என்பது மட்டுமல்ல. தேவர்களுக்கும் இந்திரனாக (அரசனாக) ஆக முடியும் என்றும் அர்த்தம். அதாவது, முயற்சியால் கைவரக்கூடாத பொருளும் பதவியும் இல்லை என்றுதான் புராணக்கதைகள் நமக்கு பாடமாக கற்பிக்கின்றன.

'நம்முடைய மூதாதைகள் உலக நாகரிகத்துக்கு ஒரு காலத்தில் வழிகாட்டிகளாக இருந்தார்கள் என்பது அசைக்க முடியாத உண்மை. ஆனால் அவர்களுடைய சந்ததியில் பிறந்த நாமோ, புழுக்களுக்கும் கேவலமாக, உலகத்தாரால் இப்பொழுது மதிக்கப்பட்டு வருகிறோம். நம்மவர்களுக்கு புத்திக் குறைவு இல்லை நல்லதனத்திலும் குறைவு இல்லை. நம்மவர்களுக்கு குறைவு இருப்பது தைரியம் என்ற அற்புதமான தன்மையில் தான்.

'தைரியம் போய்விடவே, எதைப்பற்றியும் யோசிக்கவோ நம்மவர்களுக்கு ஊக்கம் இல்லா

மல் போய்விட்டது. புதிதாக எதையும் சோதித்துப் பார்க்கவும் நம்மவர்கள் பயப்படுகிறார்கள். எந்தத் தண்டாவிலும் சிக்கிக்கொள்ளாமல் சௌக்கியமாக 'இருக்கவேணும் என்று நம்மவர்கள் சதா பஜனை செய்துகொண்டு வரும் 'பத்திர புத்தி' இந்த பயத்தால் தான் ஏற்பட்டது.

'இந்த பத்திர புத்தியாலும், பயத்தாலும் தான், பழைய சங்கதிகள் எல்லாம் சிலாக்கியமானவைகள் என்று நம்மில் பலர் பல்லவி பாடி வருகிறார்கள். மற்ற தேசங்களில், இந்தப் பல்லவியை வெகுவாக பாடுவதில்லை.

'வெள்ளைக்கார தேசத்தில் அற்புதச் சரக்கு ஒன்றை கண்டு பிடித்திருக்கிறார்கள். அதற்கு மின்சார சக்தி என்று பெயர். இது கற்பனைக் கடங்காத ஒரு சக்தி. மின்சாரம் தோன்றிய பின்னரும் கட்டை வண்டி மனப்பான்மை நம்மவர்களிடம் இருப்பது ஆச்சரியமாயிருக்கிறது. மின்சாரம் செய்ய முடியாத எதுவும் இருக்காது.

'மின்சார சக்தியை மனதில் நினைக்கும் பொழுதெல்லாம், எனக்கு உள்ளப் பூரிப்பு ஏற்படுகின்றது. ஈரேழு பதினான்கு உலகங்கள் இருப்பதாகச் சொல்லுகிறார்களே, அவைகளுக்குப் போக, மின்சாரம் உபயோகப்படும். இந்த சக்தியின் நுட்பங்களை கண்டறிந்தவர்கள்தான் உலகத்தில் முற்போக்கு அடைய முடியும். ஆமணக்கு எண்ணெய் விளக்கு கண்ணுக்கு குளிர்ச்சி என்று ஒரு மூலையில் உட்கார்ந்து கொண்டு சொல்லிக்கொண்டிருக்கலாம். ஆனால் அந்த உபதேசம் இனிமேலும் பயன் படாது.

'கட்டை வண்டி, ஆமணக்கு எண்ணெய் விளக்கு, ஜன்னல் இல்லாத வீடு, தேசபக்தி இல்லாத படிப்பு, பரலோக வாழ்க்கை முதலியவைகள் ஆண்டு மாறிப் போன விஷயங்கள். (துபாஷ் முதலியாரும் சூரியும் ஏக காலத்தில் தலையை அசைத்தார்கள்.)

'இவைகளைப் போலவே, ஆண்டு மாறிப் போன இன்னொன்றும் இருக்கிறது. அதற்கு ஜாதிப் பிரிவினை என்று பெயர். வாழ்க்கையில் சுகமாக வாழ்பவர்கள் ஜாதிப் பிரிவினையை ஆதரிக்கலாம். கஷ்டப்படாமல் ஜீவனம் செய்பவர்கள் வைதிகம் கொண்டாடலாம். நம் தேசம் அடிமைப்பட்டு கிடக்கிறதே என்ற ரோஷ உணர்ச்சி இல்லாதவர்கள், புராதன கோட்பாடுகளைப் பற்றி பஞ்சாங்கம் ஓதிக்கொண்டிருக்கலாம். மற்றவர்களுக்கு, இது பிடிக்காது.

'சின்னஞ் சிறிய நோயைக் கூட எதிர்த்துப் போராட முடியாமல் அவ்வளவு பசைக் குறைவு நமது உடம்புகளில் ஏற்பட்டு விட்டது. நம்மவர்கள் அல்ப ஆயுசுக்காரர்களாக ஆகிவிட்டார்கள். இதைப்பார்க்க மனசு தவிக்கிறது.

'ஆகவே முற்போக்குவேண்டுமானால், அறிவை தேடவேண்டும். ஸயன்ஸைகற்றுக்கொள்ள வேண்டும். எல்லையில்லாத அளவில், தைரியத்தையும் ரோஷத்தையும் பழக்கிக் கொள்ள வேண்டும். எதையும் யோசனை செய்துதான் செய்வோம் என்று கங்கணம் கட்டிக்கொள்ள வேண்டும். நம்முடைய வாழ்க்கையை அடியோடு மாற்றிக்கொள்ளவேண்டும்.'

சாம்பு மிகவும் உருக்கமாக பேசி முடித்தான். தலைவர் அதிகமாகப் பேசவில்லை. 'பிரசங்கி அவர்கள் சொன்னதில் கவனிக்க வேண்டியது ரொம்ப இருக்கிறது, யோசித்துப்பாருங்கள்' என்று அவர் தமது பேச்சை முடித்தார்.

துபாஷ் முதலியாருக்கு பிரமானந்தம். 'சாம்பு இன்றைக்கு தமிழில் பேசினது அழகாயிருந்தது. என் மனதைக் குளிரச் செய்து விட்டது. ரொம்ப அடக்கமாக, அவர் விஷயத்தை எடுத்துக்காண்பித்தார்' என்று முதலியார் சொன்னதை, சூரி அப்படியே ஒப்புக்கொண்டான். (தொடரும்.)

# வாழ்க்கையில் குறை



"ராமு"

'கணவனும் மனைவியும்' என்ற விஷயம்பற்றி ஓர் எழுத்துப் போட்டி வைத்தபோது வந்திருந்த கட்டுரைகளில் இரண்டு பிரசுரிக்கப்படாமல் இருந்தன. பத்திரிகைக்கு விஷயம் கிடைக்காத போனதுதானே ஆசிரியர் அவற்றையெல்லாம் வாசித்துப் பார்க்கிறார். முதலில் ஒரு மனைவியின் கட்டுரை அவர் கையில் கிடைத்தது. அதாவது:—

## மனைவியின் கட்டுரை

அவர் மேல் எனக்கு கொள்ளைப் பிரியம்தான். இல்லை என்று சொல்லவில்லை. ஆனால் அவருக்கு மட்டும்? அதைவிட ரொம்ப ரொம்ப பிரியம்தான். ஒரு நிமிஷம் நான் பிரிந்திருக்க சகிக்கமாட்டார். சற்று நேரம் எதிர்த்த வீட்டு கமலாவைப் பார்க்கப் போனால் அதற்குள் வீட்டிலிருந்து அழைப்பு வந்துவிடும். "என்ன அவசரம் இப்போ!" என்பேன் சிரித்துக்கொண்டே. "எங்கே போயிருந்தாய் இவ்வளவு நாழி?" என்பார். 'இங்கே வாயேன் என்னவென்று சொல்கிறேன்' என்று வம்புக்கு இழுப்பார். இப்படிப் பட்டவரிடம் என்ன செய்வது! எனக்கு ஒரு பக்கம் யாராவது கேலி செய்வார்களோ என்று அவமானமாயிருக்கும். இன்னொரு பக்கம் அவர் செய்யும் காரியங்கள் இன்பமாகவும்தான் இருக்கும்.

ஆனால் கோபு பிறப்பதற்கு முந்திதான் இப்படியிருந்தது. அதற்கு அப்புறமும் பிரியமில்லாமல் இல்லை. என்னை அடிக்கடி அவர் சீண்டுவதுதான் தரும சங்கடமாய்ப்போக ஆரம்பித்துவிட்டது.

குழந்தை 'வீல், வீல்' என்று அழுவான். அவனை சமாதானப் படுத்தப்போவேன். அப்பொழுதுதான் இவர் அவசரமாகக் கூப்பிடுவார். விஷயம் வேறொன்றுக்குமிராது. அவருடைய பேனா எந்தக் கோட்டுக்குள்ளாவது போய் ஒளிந்துகொண்டிருக்கும். "இதையெல்லாம் கொஞ்சம் கவனிக்கிறதற்கென்ன? எப்பொழுது பார்த்தாலும் குழந்தை குழந்தை என்று என்னவேண்டி கிடக்கிறது?" என்பார். எனக்கு வரவர எரிச்சலாய்க்கூட இருக்கும்.

குழந்தைமேல் அவருக்கு ஆசையில்லையோ என்று நினைத்துவிடக்கூடாது. நான் வெறுமே குழந்தையை அதட்டக்கூட சகிக்கமாட்டார். ஆனால் "குழந்தையைக்கண்டு கரிக்கிறீர்களே" என்றால் 'பெண் பாட்டி' செயலற்றுப்போனால் தான் குழந்தையைக் கரிக்காமலிருக்க முடியும்' என்கிறார். அப்பா! எதையெடுத்தாலும் முரட்டுத்தனமாய் சாதித்துவிடுவார்.

பெண்களுக்குப் புருஷன் என்னதான் ராமனாகவே இருந்தாலும் அவர்கள் சற்றுத் தனியாக இருக்கவேண்டிய சந்தர்ப்பம் உண்டு என்பதை இவர் ஒத்துக்கொள்வதேயில்லை. "புருஷனைக் கவனிப்பதைவிட பெண்களுக்கு வேறென்ன தான் வேலை இருக்கமுடியும்?" என்பதே அவருடைய கேள்வி. இருக்கட்டும்; அவர் சொல்வதையே ஏற்றுக்கொள்வோமென்றால் எப்பொழுது பார்த்தாலும் குலாவிக் கொண்டேயிருக்கப் பிடிக்கிறதா ஒருத்திக்கு? "இதென்ன குடித்தனம் செய்யும் வீடா? அல்லது.........—"

இதை ஜாடையாகக்கூட அவரிடம் சொல்லி மீண்டுவர முடியாது. "கணவனும் மனைவியும் வேடிக்கையாய்ப் பேசி மகிழ்வது ஏதாவது கேவலமா? இல்லையென்றால் சண்டைபோட்டுக் கொண்டு சதா உம்மென மூஞ்சி மாதிரி ஒருவரைப்பார்த்து ஒருவர் உருமிக்கொண்டிருப்பது தான் குடித்தனமா?" என்றெல்லாம்பிடித்துக்கொண்டு விடுவார் மேடைப் பிரசங்கத்துக்கு. புருஷன் என்னைக் கேலி செய்வதோ, என்மேல் பிரியமாயிருப்பதோ அல்லது என்னைக்கிண்டிக் கிண்டி சீண்டுவதோ எனக்கு வேண்டித்தான் இருக்கிறது. அது வேண்டியதும் தான். ஆனால் என்னால் தான் அதை ருசிப்புடன் அநுபவிக்க முடியவில்லை. மனசிலிருக்கும் எண்ணங்களை சிநேகிதிகளிடம் கொட்டிப் பரிமாறினால் தானே என் அநுபவங்களுக்கெல்லாம் ஒரு தனிச் சுவையும் உருவும் ஏற்படும்? 'நீங்கள் இப்படிப் பேசுகிறீர்களே எனக்கு ரொம்பவும் இன்பமாயிருக்கிறது' என்று அவரிடமே சொல்லிப் புகழ்ந்து கொள்ள முடியுமா, என்ன? இதெல்லாம் அவருக்குத் தெரியாது. தெரிந்தாலும், "போடி பைத்தியம்! நான் உன்னிடம் பேசுவதையெல்லாம் வெளியில் சொல்லி என்னை வெளியில் தலைகாட்ட முடியாமல் செய்வதற்கா? நீ அவர்களிடம் சொல்ல, அவர்கள் தம் புருஷர்களிடம் அதை கொஞ்சம் கூட்டிக் குறைத்து சொல்லி வைக்க—அப்புறம் அவர்கள் என்னை வந்து தொண-தொணக்க-போறும்: வேறே வினை வேண்டாம்" என்று ஆரம்பித்து விடுவார்.

அவரோடு சதா பல்லைப் பல்லைக் காட்டிக் கொண்டும் பேசிக் கொண்டுமிருப்பதாவது தேவலை. அவர் பிணங்க ஆரம்பித்துவிட்டாலோ அப்புறம் கேட்கவேண்டியதில்லை. என்னை அழ அழ வைத்துவிடுவார். அல்லது கெஞ்சக் கெஞ்ச அடித்து விடுவார். நானாக செய்யக் கூடாததெல்லாம் செய்து அவரைத் திருப்தி படுத்த வேண்டி வந்துவிடும். இல்லாவிட்டால் 'காப்பி சாப்பிட மாட்டேன்' என்பார். சாப்பாடு வேண்டியதில்லை என்று சத்தியாக்ரஹப்போருக்குத் தயாராகி விடுவார். நானாவது அப்பொழுது கோபித்துக்கொண்டு அதட்டமுடியுமென்றாலோ நடக்கவே நடக்காது! ஏனென்றால் எனக்கு அப்பொழுது கோபமே வராது. உங்களுக்குச் சிரிப்பாய்த்தான் இருக்கும் நான் சொல்வது? எனக்குக் கோபம்

வரும் சமயமும் ஒன்றுண்டு. அது எப்பொழுது என்றால் நான் சொல்வதை அவர் உடனேயே செய்து விட்டு மறு காரியம் பார்க்கிறாரே அப்பொழுதுதான். "கொஞ்சமாவது சம்ஸார ருசியே தெரியாத அப்பாவியாய் இருக்கிறாரே" என்று நினைக்கும் போது எனக்கு அழுகை கூட வந்து விடும். ஊடலும், ஆடலும் அவ்வளவு எதிர் பார்த்து ஏங்கும் விஷயங்கள் அல்லவா.?

என் மனசில் நான் எண்ணுவதெல்லாம் என் கணவர் செய்து முடிக்க வேண்டும் என்ற ஆசைக்கு ஒரு குறைவுமில்லை. ஆனால் அப்படி அவர் செய்து முடிக்கும் அருமையை நான் நாலு பேர்களிடம் சொல்லிப் பெருமை யடித்துக்கொள்ள ஒரு மனிதர் சந்தர்ப்பம்கொடுக்க வேணுமா, வேண்டாமா? அது தான் இவரிடம் கிடையவே கிடையாது.

"பேசுவதற்கு நான் இல்லையா? என்னிடம் சொல்லேன்" என்கிறார்.

நானும் ஒரொரு சமயம் இப்படிக் கேட்பதுண்டுதான். ஆனால் இவர் கேட்டால் மட்டும் நான் என்னத்தை இவரிடம் சொல்லிக் குட்டிச்சுவராய்ப் போகிறது?' என்று தான் தோன்றும் எனக்கு.

கமலாவின் புடவையைப் பற்றிச் சொல்லலாம்: லக்ஷ்மி வீட்டுச் சண்டையைப் பற்றிச் சொல்லலாம். வீட்டில் ஏதானும் வேண்டியிருந்தால் அதைச் சொல்லலாம்; தெருவில் நடந்த விசேஷத்தை ஒன்று கூட விடாமல் சொல்லிவிடலாம். கொஞ்ச நாழிகை நீங்கள் வெளியில் போய் வாருங்கள். நான் உங்கள் காரியத்தை என் தோழிகளிடம் சொல்லி விட்டு பெருமை காட்டிக்கொண்டு வருகிறேன்' என்று என்ன விதமாய்ச் சொல்வது அவரிடம்?

என்னுடைய மன்னி எழுதின கடிதத்தில் "உனக்கு ஒரு குறைவுமிருக்காது, சந்தோஷமாகவே இருப்பாய் என்று நினைக்கிறேன். அந்தமோக்ளாவில் எனக்குப் பதில் எழுதக் கூட மறந்துபோகாதே" என்று எழுதியிருக்கிறாள். என் குறையை அவள் எப்படிக் கண்டாள்?' இந்தக் குறையை யாரிடம்தான் போய் எழுதித்தொலைப்பது?

* * * *

ஆசிரியர் அடுத்தக்கட்டுரையை எடுக்கிறார்.

## கணவன் கட்டுரை

இவள் (என் சஹதர்மிணியைத் தான் சொல்கிறேன்.) (இருக்கிறாளே.........! அப்படி ஒன்றும் விஷயம் தெரியாதவளல்ல:) நல்லவள்தான்; கெட்டிக்காரியேதான். இருந்தும் இன்னும் கொஞ்சம் அடிபடணும். உல்லாசமாயிருக்கும் தம்பதிகளைப் பார்க்க வேணும். சாவித்திரியும் இளம் பேடைகளின் ஜோடியைப் பார்த்திருந்தால் இவளுக்கு இங்கிதம் பாடமாகி விடும். அழகிலும், அன்பான சுவை நிறைந்த சல்லாபப் பேச்சிலும் தன்னை ஐக்கியப் படுத்திக்கொள்ள அவள் கொஞ்சம் கற்றுக்கொள்ளவேண்டும்.

அவளிடம் அடிக்கடி தோன்றும் லஜ்ஜைக்குக் காரணம் எனக்குத் தெரியவேயில்லை. என்னை விட்டுத் தனியே அவள் அடிக்கடி போக விரும்புவது ஏன் என்பதும் புரியவில்லை. இவளது ஊடல் அர்த்தமற்றது போலிருக்கிறது. விருப்பமிருப்பதை எளிதில் நிறைவேற்றிக் கொள்ள ஏனோ தயங்குகிறாள். புஷ்பத்தை எட்டிப் பறிப்பது போல எழும்ப வைக்கிறாள்.

நான் எங்காவது வெளியில் போய் வந்தால் அப்படி வருவதற்குக் கொஞ்சம் நேரமாகி விட்டால்,"ஏன் இவ்வளவு நாழி? எங்கே போயிருந்தீர்கள்? வீட்டு ஞாபகமே இருந்தால்தானே!" என்றெல்லாம் அடுக்குகிறாள். நான் வீட்டிலிருந்தாலோ "எதிர்த்த வீட்டுக்கு போயிட்டு வருகிறேன். நீங்கள் வீட்டில் குழந்தையைப் பார்த்துக் கொண்டிருங்கள்" என்று கிளம்ப ஆரம்பித்து விடுகிறாள். போய் வரட்டும். வேண்டாமென்று சொல்லவில்லை. அங்கே போய் சும்மாயிருப்பாளா? கிடையாது. என்னைப்பற்றி பெருமையெல்லாம் அடித்து பீத்திக் கொண்டிருப்பாள். நான் என்ன வெளியில் தலைகாட்டுவதா?

போகட்டும்; வீட்டிலிருந்தாலோ குழந்தை ஒன்று இருக்கிறது. கோபமாய் "குழந்தை, குழந்தை என்றால் குழந்தையின் தகப்பனின் கதி என்னாவது? ஏன்னு கேட்டாலொழிய அசையாமல் அழுத்தம் செய்கிறாள். குழந்தையென்று எனக்குமட்டும் ஆசையில்லையா, என்ன? காரணம் வேறு. தான் கொஞ்சம் விலகினாற்போல் இருப்பதற்கு குழந்தையை இவள் சாக்கிடுகிறாள். அலுத்துப்போய் வீட்டுக்கு வந்த மனிதனுக்கு மழலைச் சிரிப்பு காட்டும் குழந்தை ஒன்று இருந்தாலே போதும் ஆறுதலளிக்க என்பதை ஒப்புக் கொள்கிறேன். ஆனால் அதற்கு—அந்தக் குழந்தைக்கு எங்காவது ஒரு பிரியமுள்ள மனைவியின் பக்குவம் வருமா? தெரியுமா? ஏனோ இது இவளுக்கு புரிவதேயில்லை!

எங்கேயாவது போக வேண்டும் என்று சொல்லட்டும்: என்ன புடவை அல்லது சாமான் வேண்டும் என்றாவது கேட்டு வாங்கிக் கொள்ளட்டும்: அல்லது விருப்பமானபடி பேசிக் கொண்டிருக்கட்டும்; இதெல்லாம் இல்லாமல் லோபித்தனமாக, புருஷனுடன் வாழ்வதைக்கூட ஓர் அளவுக்குள் அடக்கிவிட நினைப்பது சரியென்று தோன்றுகிறதா?

புருஷன் மனைவியென்றால் ஏற்றத்தாழ்வு அநேகமிருக்கும். நான் கெஞ்சும்படி இருந்தாலும் இருக்கும்; அவள் கெஞ்சும்படி இருந்தாலும் இருக்கும். திரை மறைவில் நடக்கும் இந்த விஷயங்களை நாமே போய் வெளியில் சொல்லிவிட்டு வரவேண்டுமென்றால்—? எப்படி இருக்கிறது காரியம்?

புருஷன் பிற பெண்களைக் காணும்போது தான் குறிப்பாக கௌரவமாய்நிமிர்ந்துநடப்பான் விறைப்பு சிறப்பாக இருக்கப் பிரியப்படுவான். அதுவும் அந்தப் பெண்களிடமே போய் என் சரணாகதிப் படலத்தையோ அவள் அபயம் கொடுக்கும் படலத்தையோ போய்ப் பாடிவிட்டு வரப் பிரியப்படுவதென்றால் அதை எப்படித்தான் தீர்க்க முடியும்?

"உனக்கென்னப்பா! பாக்கிய சாலி, பணம்கிடைக்கிறது. அதிர்ஷ்டம் இருக்கிறது. அருமையான பங்களா. அன்புள்ள மனைவி; காலாகாலத்தில் குழந்தை..."— இப்படியே அடுக்கிக்கொண்டு போகிறார்கள் நண்பர்கள்.

சொல்லட்டும்; பெருமையாய்த் தானிருக்கிறது. ஆனுல் என் குறையை இவர்கள் எங்கே கண்டார்கள்?

* * * *

இவ்வளவுதான் ஆசிரியர் படித்தார். மளமளவென்று நீலப் பென்சிஞல் ஆசிரியரின் பார்வைக்காக அடியில் ஒரு குறிப்பு எழுதினுர்.

* * * *

'கணவனும், மனைவியும்' என்ற போட்டியில் அநேக கணவர்களும் வேறு அநேக மனைவிகளும் அல்லது தம்பதியாகவே இல்லாதவர்களும் எழுதியிருப்பார்கள். ஆனுல் ஒரே கணவனும் அவனுடைய மனைவியுமே எழுதியிருப்பது அரிதாய்தான் இருக்கும். எல்லோரும் தரித்திரத்தினுலோ, வேற்றுமையினுலோ, தம்பதிகளுக்குள் மனஸ்தாபம் ஏற்படுவதையும், வேறு வகையில் மணவாழ்க்கையில் வெறுக்கத்தக்க குறையிருப்பதையும் மனமுருக எழுதியிருப்பார்கள்.

முன்னுல் ஒருவார்த்தை. இந்த தம்பதிகளின் குறை இவர்கள் நினைப்பதுபோல் இல்லை. இவர்களில் மனைவி, கணவனுடைய நட்பை வெகுகாலம் அநுபவித்து சகிக்க எண்ணுகிருள். கணவனே அவள் கிழவியான பிறகு என்ன அவளிடம் குலாவமுடியும்? அதைப்பூராவும் இந்த இளமையிலேயே நடத்திக்கொள்ளலாமே என்று நினைக்கிருன். மனைவி விலகிக்கொள்வது போல் பாசாங்கு செய்வதை இவன் குறையாக எண்ணுகிருன். அவள் தன் எண்ணம் நிறைவேருமல் போவதுபோல் எண்ணிக்கொண்டு அதைக் குறையென்று நினைத்துக்கொள்கிருள். (பல வார்த்தைகளாகி விட்டன மன்னிக்கவும்.)

ஆகவே—வெளியில் தெரியக்கூடிய குறையே இல்லாத இத்தம்பதிகளின் இந்தக் குறை நமக்கு தெரியாமலிருப்பது ஒரு குறைதான்! அவர்களுக்கு, இந்தப் போட்டியில் பரிசு கிடைக்காமல் போனதும் ஒரு குறை தான்! அவர்களிருவரும் 'பணமிருக்கட்டும்; எல்லா வசதிகளுமிருக்கட்டும்' ஆயினும் சம்சாரம் குறையுள்ளது தான்! குறையில்லாத வாழ்க்கையே யில்லை என்று நிரூபிப்பதுபோல எழுதியதை நம்முடைய போட்டிப் பந்தயத்துக்கு அனுப்பியது மகா வருந்தத்தக்க குறையே தான்!

---




# சர்வதேச சங்கம்





*சர்வதேச விவகாரங்களில் அஹிம்ஸா தர்மத்துக்கு இடமுண்டா? இப்போதுள்ள நிலைமை அம்முறைக்கு அனுகுணமாயிருக்கிறதா? சர்வதேசச் சங்கம் முறிந்து போனதற்கு உண்மைக் காரணம் என்ன? இவற்றையெல்லாம் தெளிவுபடுத்தி ஸ்ரீமான் எஸ். சத்தியமூர்த்தி தமது குமாரிக்கு எழுதிய கடிதம் கீழே வெளி வருகிறது. இதை அவர் 1941- வருஷம் ஜூலை மாதம் 6-ந் தேதியன்று சென்னை ஜெனரல் ஆஸ்பத்திரியிலிருக்கையில் எழுதினர்.*

**என் அன்புள்ள
லக்ஷ்மிக்கு,**

அஹிம்ஸா தர்மத்தை லக்ஷ்யமாக்கிக் கொள்ள முயலவேண்டியதுதான். ஆனல் இன்றுள்ள நிலைமையில் அதை அனுபவசாத்தியமாக்கிக்கொள்ள வேண்டுமென்றால் அது பயன் பெறுமென்று தோன்றவில்லை. சென்ற என்னுடைய இரண்டுகடிதங்களிலிருந்தும் இதை நீ உணர்ந்துகொண்டிருப்பாய். இது ஏமாற்றத்தைத் தரக்கூடிய முடிவுதான். ஆனல் உண்மையை நிதானித்துதானே பார்க்கவேண்டியிருக்கிறது? இந்த லக்ஷ்யம் சித்திபெறுவதற்கு ஓரளவுவேனும் ஏதாவது செய்யு முடியுமா? செய்ய முடியும்; செய்யவேண்டும்.

வகுப்புக் கலகங்கள் சம்பந்தப்பட்டவரையில் நாம் விவேகத்தை உபயோகித்து நடக்க வேண்டும். எல்லா வகுப்புகளிலும் நல்லவர்கள், கெட்டவர்கள் இருக்கின்றனர். அடியோடு கெட்டதாகவோ, அல்லது முற்றிலும் நல்லதாகவோ எந்த வகுப்பும் கிடையாது. ஆத்திரமுற்ற சமயத்தில் முஸ்லிம்களும், ஹிந்துக்களும் தங்களை மறந்து செயல்புரிகின்றனர். அமைதியாயிருக்கையில் கலவரங்களின்போது தாங்கள் செய்த காரியங்களை நினைந்து அவர்கள் வருந்தி வெட்கப்படுவர். இதை நாம் உணரவேண்டும். எல்லோருமே அப்படி இல்லாவிட்டாலும் சிலரேனும் மேற்சொன்னமாதிரி நினைப்பார்கள். அவர்கள் யார் என்பதை அறிந்துகொள்ளவேண்டும். கலவரங்கள் நடக்கும்பொழுது நிரபராதிகளான முஸ்லிம்களைப் பாதுகாப்பதற்கு ஹிந்துக்கள் அஹிம்ஸா தர்மத்தைக் கைக்கொள்ளலாம். வகுப்புகளிடையே அமைதியும், சௌஜன்யமும் நிலவச் செய்வதற்கு இதைவிடச் சிறந்த மார்க்கம் வேறில்லை.

39

இவற்றையெல்லாம் விட சாதாரண காலங்களில் நம் நாட்டின் அன்றாட வாழ்வில் அஹிம்ஸா தர்மத்தை எல்லா வகுப்பினரும் கடைப்பிடிக்க வேண்டும். 'ஹிந்துபாணி' 'முஸ்லிம் பாணி' 'ஹிந்து சா' 'முஸ்லிம் சா' 'ஹிந்து கானு' 'முஸ்லிம் கானு' இப்படியெல்லாம் வட இந்தியாவிலுள்ள ரயில்வே பிளாட்பாரங்களில் கூவுகின்றனர். ஹிந்துக்கள் முஸ்லிம்களின் கடையிலும் முஸ்லிம்கள் ஹிந்துக்களின் கடைகளி

லும் வாங்கமாட்டார்கள். இவையெல்லாம் ஒழிய வேண்டும். எப்போதாவது தகராறு இருந்தபோதிலும் நாம் எல்லோரும் ஒன்றுபட்டு சேவைசெய்து சகோதரர்கள் போல் இருக்க வேண்டும்.

சர்வதேச விவகாரங்களில் ஏதாவது கொஞ்சமாவது அஹிம்ஸா தர்ம அனுஷ்டானத்துக்கு இடமுண்டா? இடமுண்டு; ஆனல் ஒன்று. பெரிய நாடுகள் நாட்டாசையைவிட்டு அந்தரங்க சுத்தியோடு அமைதியாக மற்றைய நாடுகளுடன் வாழ முற்பட்டால் அது சாத்தியமே. இத்துறையில் சர்வதேசச் சங்கம் அமைப்பு உருவான முயற்சி எனலாம். ஆனல் அது பரம கேவலமாக முறிந்து போயிற்று. ஆரம்பமே சரியாயில்லை. இது உருவடைவதற்குப் பொறுப்பாளியாயிருந்தவர் ஓர் அமெரிக்க ஜனதிபதி. ஆனல் அமெரிக்கா அதில் சேரவில்லை. பின்னர் இத்தாலி, ரஷ்ய, ஜர்மனி, ஜப்பான் ஆகிய நாடுகளும் விலகிக் கொண்டு விட்டன. எஞ்சி அங்கம் வகித்த நாடுகளும் இதர நாடுகளைப்பற்றியில்லாமல் தங்கள் விஷயத்தையே கவனித்துக்கொண்டிருந்தன.

பொருளாதாரத் துறையிலேனும், அதாவது நாட்டாசை கொண்ட நாடுகளுக்கு எண்ணெயையோ, யுத்த தளவாடங்களையோ விற்பனை செய்யாமல் ஏற்பாடுகள் செய்திருந்தால் சர்வதேசச் சங்கம் ஏதோ ஒன்றைச் செய்ததாகவிருக்கும். ஆனல் அது அங்ஙனம் செய்யவே இல்லை. ஜப்பான் சீனவிடமிருந்து மஞ்சூரியாவைப் பிடித்துக் கொண்டு அதற்கு மஞ்சுகோ என்ற பெயரிட்டபோது சீனவுக்கு சர்வதேச சங்கம் உதவவில்லை. அபிஸீனியாவிலும் அப்படியே. இத்தாலிக்கு அப்போது எண்ணெய்விற்பனை செய்யப்பட்டது. தொடர்ச்சியாக அநேகம் விஷயங்களில் சர்வதேச சங்கம் வழி காட்டத் தவறிவிட்டது.

சர்வதேச சங்கம் தோல்வியுற்றதற்குக் காரணம் என்ன? அது உண்மையான சர்வதேச சங்கமாக அமையவில்லை என்பதுதான். இதில் சீன ஒரு மெம்பர். ஆனல் அதற்கு உண்மையான செல்வாக்கு அதில் இல்லை. இந்தியாவும் அதில் ஒரு மெம்பர்தான். அனுஷ்டானத்தில் இது பிரிட்டனுக்கு அதிகப்படியாக ஓர் ஓட்டு என்பதைத் தவிர வேறில்லை. உலக ஜனத்தொகையில் பாதி பங்குள்ள ஒரு சமாஜத்துக்கு உண்மையான செல்வாக்கில்லையானல் எப்படி சர்வதேச சங்கம் வெற்றி பெறும்.

இதனல் அஹிம்ஸா முறைக்குச் சர்வதேசத்தில் இடமில்லையென்று அர்த்தமா? இல்லையென்று சொல்ல நான் தயங்குகிறேன். திட்டமாக இடமுண்டு என்று இப்போது சொல்லவும் முடியாது. விவாதம், மத்தியஸ்தம் முதலியவற்றைக் கூடுமானவரையில் கையாண்டு பார்க்கவேண்டும். ஆனல் இதுவரை இது வெற்றிபெறவில்லை. சர்வதேசச் சச்சரவுகள பலவற்றை நீதிபதிகள் உள்ள விசாரணை சபையைக்கொண்டு ஏன் தீர்க்கலாகாது? இந்த யுத்தத்திற்குப் பிறகாவது விவேகமுள்ள உலக நிலை உதயமாகுமென நான் நம்புகிறேன். சீனவும், இந்தியாவும் சுயமான அந்தஸ்தை அடைந்தால் மத்தியஸ்தத்தின் மூலம் உலக சமாதானத்தைப் பராமரிக்கும்விஷயத்தில் அவை பெரிதும் உதவக் கூடும். யுத்தங்களால் சச்சரவுகள் தீராது; ஆனல் அவற்ருல் மேலும் யுத்தங்களே தலையெடுக்கும் என்பதை ஐரோப்பியநாடுகள் உணரநேரும். அப்படிப்பினையை உணரும்பக்ஷத்தில் புதிய, பரிசுத்தமான சர்வதேச சங்கம் உதிக்கும். இதற்கிடையே யுத்தக்கொடுமையைத் தணித்து அமைதியை நிலை நாட்ட சில வழிகள் உண்டு. அவற்றை அடுத்த கடிதத்தில் தெரிவிக்கிறேன்.

[signature]

---

# குருவியின் பரிசு

★

— "ஸ்வாமி" —

முன்னொரு காலத்தில் ஒரு கிராமத்தில் ஒரு கிழவனும் கிழவியும் வாழ்ந்து வந்தார்கள். கிழவன் மிகவும் நல்லவன். ஈவு இரக்கம் உள்ளவன். கிழவி கோபக்காரி. ஒரு அழகான குருவியைக் கிழவன் வளர்த்து வந்தான். கிழவிக்கு அது பிடிக்கவில்லை.

ஒரு நாள் கிழவன் வெளியே போயிருந்த சமயம்,



குருவி வீட்டில் சிந்திக் கிடந்த நாலைந்து அரிசியைக் கொதத்தின்றது. கிழவிக்கு உடனே கோபம் பற்றிக் கொண்டு வந்தது. அவள் குருவியைப் பிடித்து, அதன் நாக்கை வெட்டி விட்டாள். குருவி அழுது கொண்டே பறந்து ஓடிப் போயிற்று.

கிழவன் வீட்டுக்கு வந்து பார்த்தபோது, குருவியைக் காணவில்லை. தன் மனைவியைக் கேட்டான். அவள் முகத்தை சிடு சிடு என்று வைத்துக்கொண்டு, "அது அரிசியை தின்றால், நான் பார்த்துக்கொண்டா இருப்பேன்? அதன் நாக்கை வெட்டிவிட்டேன் இப்போது அது எங்கே போச்சோ, யாருக்கு என்ன தெரியும்?" என்றாள்.

கிழவனுக்கு உண்டான வருத்தம் கொஞ்ச நஞ்சமல்ல. அவனுக்கு வீட்டில் இருக்கவே பிடிக்கவில்லை. தன் அருமைக் குருவியைத் தேடிக்கொண்டு காடு மலை எல்லாம் அலைந்தான். அதை எங்கும் காணவே காணோம்.

ஒருநாள் மிகவும் சோர்ந்து போய், மலையடிவாரத்தில் உட்கார்ந்திருந்தான் அவன். அப்போது, குருவி தற்செயலாக அந்தப் பக்கம் வந்தது. இருவரும் ஒருவரை யொருவர் பார்த்துக் கொண்டார்கள். கிழவன் மிக்க ஆனந்தம் அடைந்தான். குருவி, கிழவனைத் தன் வீட்டிற்கு அழைத்துக் கொண்டுபோயிற்று. அங்கே தன் மனைவி மக்களுக்கு அவனை அறிமுகம் செய்து



வைத்தது. ஆடம்பரமாக, ஒரு விருந்தும் நடந்தது.

வந்த வேலை முடிந்தது. குருவியைப் பார்த்தாய்விட்டது. கிழவன் மறு நாள் ஊருக்குப் புறப்பட்டான்.

அப்போது குருவி, கிழவனை உள்ளே அழைத்துச் சென்றது. அங்கே இரண்டு கூடைகள் துணியால் மூடப்பட்டிருந்தது. ஒன்று பெரியது; மற்றொன்று சிறியது.

குருவி சொல்லிற்று:—"இதோ இந்தக் கூடைகளில் உங்களுக்கு ஒரு பரிசு வைத்திருக்கிறேன். இரண்டில் எது இஷ்டமோ அதைச் எடுத்துச்செல்லுங்கள். இங்கு திறக்காமல், வீட்டுக்குப் போய் திறந்து பாருங்கள். உங்கள் மனம் போல, பொருள் இருக்கும்"

"நான் கிழவன். எதையும் தூக்கிக்கொண்டு போக எனக்கு வலுவு இல்லை. ஆனால் நீ அன்பாகக் கொடுக்கிறாய், ஆகையால், சிறிய கூடையே போதும்" என்றான் கிழவன். அப்படியே சிறிய கூடையை தூக்கிக் கொண்டு வீட்டுக்கு வந்தான். கிழவி என்ன சொல்வாளோ என்று, உள்ளுக்குள்ளே அவனுக்குப் பயம்.

கிழவி அவனைப் பார்த்தாள். அவளுக்கு அளவற்ற கோபம் உண்டாயிற்று. "இத்தனை நாளாக எங்கே போயிருந்தாய்?" என்று கேட்டாள்.

கிழவன் நடுங்கிய குரலில் "குருவியைப் பார்க்கப் போயிருந்தேன்" என்றான்.

"கூடை யாருடையது? அதில் என்ன இருக்கிறது?", என்று கிழவி கேட்டாள்.



"புறப்பட்டு வரும்போது குருவி கொடுத்தது" என்றான் கிழவன்.

கிழவியின் கோபம் சிறிது தணிந்தது. அவள் ஆவலாகக் கூடையைத் திறந்து பார்த்தாள். என்ன அதிசயம்! அதில் ஏராளமான தங்க நகைகளும் வெள்ளி நகைகளும் இருந்தன.

கிழவிக்கு பேராசை உண்டாயிற்று. தானும் குருவியின் வீட்டுக்குப் போய் பரிசு வாங்கிக் கொண்டு வர, விரும்பினாள். கிழவனிடம் வழி கேட்டுக் கொண்டு, குருவியைப் பார்க்க போனாள். பல நாட்கள் காடு மலை எல்லாம் அலைந்தாள். கடைசியில் ஒரு விதமாகக் குருவியின் வீட்டைக் கண்டு பிடித்தாள். குருவியைப் பார்த்ததும், "உன்னை பார்க்காமல் ஒரு நாள்கூட இருக்க முடியவில்லை. குழந்தைகள் சுகமா? நான் கோபத்தில் ஏதாவது செய்திருந்தால் நீ அதை மனதில் வைத்துக்கொள்ளலாமா?" என்று அன்பாகக் கேட்பது போல் நடித்தாள்.

குருவி அவளையும் வரவேற்றது. விருந்தும் வைத்தது. ஐந்தாறு தினங்கள் சென்றன. கிழவி ஊருக்குப் புறப்பட்டாள். ஆனால், குருவி அவளுக்கு ஒன்றும் கொடுக்கவில்லை. கிழவி விடுவாளா? "குருவித் தம்பி, உன் ஞாபகம் எனக்கு என்றைக்கும் இருக்கும்படியாக ஒரு பரிசு கொடு" என்றாள்.

முன்பு கிழவனை அழைத்து காட்டியதுபோலவே, இவளிடமும் இரண்டு கூடைகளைக் காட்டியது குருவி. ஒன்று பெரியது; மற்றொன்று சிறியது. "இரண்டில் எது இஷ்டமோ அதை எடுத்துச் செல்லுங்கள் இங்கே திறக்காமல் வீட்டுக்குப் போய்த் திறந்து பாருங்கள். உங்கள் மனம்போல பொருள் இருக்கும்" என்று, அவளிடமும் முன்போலவே சொல்லியது.

"இந்தச் சிறிய கூடை யாருக்கு வேண்டும்?" என்று சொல்லி, சின்னக் கூடையை கிழவி உதைத்துத் தள்ளினாள். பெரிய கூடையைப் பரபர என்று தலையிலே தூக்கி வைத்துக்கொண்டாள்.

குருவி சிரித்தது. அதைக் கிழவி கவனிக்கவேயில்லை. வே[illegible] வீட்டிற்கு



ஓடினாள். கிழவனுக்குக் கிடைத்ததைக் காட்டிலும் பெரிய பரிசை, தான் அடைந்ததாக மகிழ்ந்தாள். வீட்டுக்குப் போனதும், அவசரமாகக் கூடையைத் திறந்து பார்த்தாள். ஆ! பாம்பும் தேளும் சீறி எழுந்து, அவள் மேல் பாய்ந்தன. அவள் கத்திக்கொண்டு ஓடினாள். மறைவில் இருந்து பார்த்துக்கொண்டிருந்த கிழவன் 'கலீர்' என்று சிரித்தான்.

---

# அபினி-அதன் குணங்கள்



[பண்டித எம். துரைசாமி அய்யங்கார்]

அபினி ஒரு விஷ குணமுள்ள சரக்கு. வைத்திய முறையில் இதற்கு விசேஷ உபயோகம் உண்டு. வேறு வகையிலும் இச்சரக்கை உபயோகிப்பவர் பெரும்பான்மையோர். இதன் ஔஷத குணங்களைச் சிலரும், விஷ குணங்களைப்பலரும் அடைகிறார்கள். வைத்தியர்கள் இதன் குணபாகங்களை அறிந்து ஜாக்கிரதையாகப் பிணியாளருக்கு உபயோகிக்கவும், வைத்தியரல்லாதார் இதன் துர்க்குணங்களை உணர்ந்து அநாவசியமாய் உபயோகிப்பதை நிறுத்தவும் கருதி இக்கட்டுரையை எழுதுகிறேன்.

அஹிபேநம் என்கிற வடமொழிச் சொல்லே அபினியென்று தமிழில் வழங்கப்படுகிறது. இந்தியாவிலுள்ள பலவேறு பாஷைகளிலும் சற்றேறக்குறைய அபின் என்று மாறுபட்டப் பெயர்தான் இதற்குக் கூறப்படுகிறது.

ஆதி காலந்தொட்டு இந்தியாதான் அபினியின் உற்பத்திக்குப் பெயர்போன நாடு. பீஹார் மாகாணத்தில் விளைவது "பாட்னா அபினி" யென்றும், ஐக்கிய மாகாணத்தில் விளைவது "காசி அபினி" யென்றும், இராஜபுதனத்திலும் மத்திய இந்தியாவிலும் விளைவது "மாளவ அபினி" யென்றும் வியாபாரஸ்தலங்களில் வழங்கப்படுகின்றன. அஸாம் மாகாணத்திலும், நேபாளத்திலுங்கூட இச்சரக்கு விளைகின்றது. இவற்றுள் "பாட்னா அபினி" மிகச்சத்துள்ளதென்று பெயர்போனது. நேபாளத்திலிருந்து இந்தியாவில் பெரும்பான்மையான இடங்களுக்கும், வங்காளத்திலிருந்து பெரும்பாலும் சீனதேசத்திற்கும் அபினி வர்த்தக முறையில் பரவுகிறது.

அபினி உற்பத்தியாகும் செடியைப் போஸ்தக்காய்ச் செடியென்றும், கசகசாச் செடியென்றும் கூறுவர். போஸ்தக் காயிலிருந்து வடிந்து உறைந்துவிடும் பாலுக்கு அபினியென்று பெயர். செடியில் போஸ்தக்காய் காய்த்ததும், காயின் காம்புகளிலிருந்து புஷ்பங்கள் உதிர்ந்து ஏழெட்டு நாட்கள் ஆனபிறகு, மாலை நேரத்தில் காய்களின்மேல் அதிக ஆழமில்லாமல் இரண்டு மூன்று கீறுகள் கத்தியால் மெதுவாகக் கீறுவார்கள். அந்தக் கீற்றுகளிலிருந்து இரவெல்லாம் பால் வடிந்து உறைந்து நிற்கும். காலையில் அவ்வுறைந்த பாலைச் சுரண்டியெடுப்பார்கள். கீறிய காய்களின்மேல் தோலிலிருந்து தானே ஆவி போல் எழும்பும் போஸ்தக்காய் பாலாகிய அபினியானது, கட்டிகளாய், அதன்மேல் இலைகளால் மூடப்பட்டிருக்கும். புதுச்சரக்கு பிசுபிசுப்புள்ளதாய், ஊதா நிறம் பெற்று, ஒருவகை வாஸனையோடு கசப்பாயிருக்கும்.

அபினியைத் தயார் செய்து பரிசோதித்துப் பார்த்த பிறகு அச்சரக்கு மூன்று விதமாகப் பிரித்துக் கட்டி, விநியோகிக்கப்படுகிறது. (1) பிரொவிஷன் அல்லது பொது விற்பனைக்கான அபினி. இதை மளிகை அபினி யென்றுங்கூறுவர். இது பெரும்பாலும் சீனதேசத்திற்குப்பெரிய உருண்டைகளாகச் செய்து வியாபாரத்திற்காக அனுப்பப்படும். (2) இந்தியாவிலேயே ஜனங்களின் உபயோகத்திற்காகத்தயார் செய்யப்படும் மற்றொரு வகை அபினி. ஆப்காரி அல்லது எக்ஸைஸ் அபினி. முன் கூறிய களிப்பான அபினியை ஒரு வாயகன்ற மரத்தட்டில் பரப்பி, உலர்த்தி, அச்சுகளில் கொட்டி, ஒவ்வொரு சேர் நிறையுள்ள சதுரத் துண்டுகளாக யந்திரத்தினால் அழுத்தியெடுத்து, எண்ணெய்ப் பசையுள்ள காகிதங்களால் சுற்றி, பந்தோபஸ்தாகக் கட்டியனுப்புகிறார்கள். (3) ஔஷத முறைகளில் உபயோகிப்பதற்காக மற்றொருவகைஅபினி தயார்செய்யப்படுகிறது. இது அநேகமாய்வெகு நாட்களாகவே பாடலி புத்திரத்தில் தயாராவது. (இப்பொழுது வேறிடங்களிலும் செய்யப்படுகிறது.) இளகலான அபினியை வாயகன்ற தட்டுகளில் பரப்பி, ஒருமாத காலம் நிழலில் உலர்த்தி, அழுக்குகள் படாதபடி பக்குவம் செய்யப்பட்ட பிறகு, ஒரு வகை எண்ணெய்ப்பசையுள்ள காகிதங்களில் சுற்றிக் கட்டி, ஔஷதசாலைகளுக்குத் தகுந்த விலைக்கு விநியோகிக்கப்படுகிறது. (4) இந்த மூன்று வகையிலும் கழிக்கப்பட்ட அபினித் தூளை காஜிபூருக்கு அனுப்பி, அதையும் ஏற்ற முறைகளால் சுத்தம் செய்து, அதிலிருந்தும் ஒரு வகை அபினிச் சத்து எடுக்கிறார்கள்.

முற்கூறிய வகையில் தயார் செய்யப்படும் சரக்கு எல்லாம் இந்திய அபினி என்றும், மேல் நாடுகளில் மருந்து முறைகளுக்கு வரவழைக்கப்படுவது துருக்கி

### அதற்குள் தைத்து!....



"இந்தாப்பா இந்தச் சட்டை கொஞ்சம்தான் கிழிஞ்சிருக்கு தைச்சுட்டா சரியாய்விடும்......"

"அதெணாலே என்னம்மா? நான் பக்கத்து வீதிக்கு போயிட்டு வந்துடறேன். அதுக்குள்ளே தைச்சு......!"

அபினியென்றும் வழங்கப்படுகிறது. டாக்டர் பி. எச். பால், ஏ. ஜே. கௌன்லி என்கிற இரண்டு இரஸாயன ஆராய்ச்சிக்காரர்கள் 1892-ல் தான் பொதுவாக ஔஷத முறைகளில் இந்திய அபினியும் உபயோகிப்பதற்கேற்ற சிறந்த சரக்கென்று பரிசீலனை செய்து பஹிரங்கப்படுத்தினர்கள்.

இந்தியா கவர்ன்மெண்டார் அபினி ஸம்பந்தமான விவஸாயத்தையும் தொழிலையும் இத்தேசத்தில் ஜனங்களின் நன்மையைக் கருதி (ஔஷதங்களுக்கு அவசியமான அளவுக்கு அதிகமான உற்பத்தியை) குறைத்துவிடலாமா என்று பரிசீலனை செய்வதற்காக 1893ல் "ராயல் கமிஷன் ஆன் ஒபியம்" என்று ஒரு விசாரணைக் கமிட்டியை நியமித்தார்கள். அக்கமிஷன் 1895-ல் தமது யாதாஸ்தில் அச்சாக்ஷியங்களுக்கு ஏற்ற அபிப்பிராயத்தையே வெளியிட்டது. அபினித் தொழிலும், அதன் வியாபாரத்தினுல் உள்ள ரெவினியூ வருமானமும் இந்தியா கவர்ன்மெண்டுக்குப் பெரிதும் ஸாதகமாயிருப்பதால் அக்கமிஷனின் யாதாஸ்து வேறு விதமாயிருக்க நியாயமில்லை யென அக்காலத்தில் ஜனத் தலைவர்கள் அபிப்பிராயப்பட்டார்கள்

## அபினிக்குள்ள ஔஷத குணங்கள்

ஔஷதத்திற்காகவே கிடைக்கும் சரக்குச் சிறிது கடினமாகவும், பழுப்பும் கறுப்புங் கலந்த நிறமுள்ளதாகவும், சுவையில் சிறிது கார்ப்பும் கசப்புமுள்ளதாகவும், ஒருவாறு குமட்டலுண்டாக்கும் வாஸனையுடன் கூடியதாகவும் இருக்கும். இது விஷ குணமுள்ளதாயினும், சிறிய அளவில் வைத்தியர்களால் பல ரோகங்களில் சிறந்த பலன் தருமாறு உபயோகிக்கக்கூடிய உயர்ந்த ஔஷதச் சரக்கு; இது சூலப்ரசமநம் (வலியைத் தணிப்பது), நித்ராகாரி என்னும் குணங்களுண்டு பண்ணுவதிற் சிறந்தது. ஆமவாதம் (கீல்வாயு) அர்புதம் (புரைகுழல்), கிரந்தி, பிரமேஹபிடகை (இராஜப் பிளவை) வித்ரதிமுதலிய ரோகங்களில் சிறந்த சூலப்ரசமந ஔஷதமாயுபயோகிக்கப்படுகிறது; இந்நோய்களில் இரவில்நித்திரையுண்டாவது அரிதாகையால் நித்திரையைத் தூண்டுவதற்கும் ஏற்றதாயுள்ளது. ஜன்னி எனப்படும் ஸந்நிபாத தோஷத்தில் பிணியாளி பேத்தலும் பிதற்றலுமாகத் தவிக்கும்போது அபினி மாத்திரைகளோடு இரண்டு குன்றுமணி எடை கற்பூரமும் கூட்டி, 3 அல்லது 4-மணி நேரங்களுக்கு ஒருமுறை கொடுப்பதால் வெகு திருப்திகரமான பலன் ஏற்படும்.

அங்கமர்தப்பிரசமநம், (உடல் நோவைத் தணியாது), ஆக்ஷேபகஹரம் (இசிவைப் போக்குதல்) என்னும் ஔஷத குணங்களைப்பெற்ற சரக்குகளுள் இது சிறந்தது. ஆகையால் வயிற்றில் இசிவு காணும்போதும், கடுமையான பேதியுடன் கூடிய வயிற்று வலியிலும், மூத்திர மார்க்கத்தில் கல்லடைப்பு ஏற்பட்டு வலி தாங்கமுடியாமல் இருக்கும் ஸமயத்திலும், சிறிது ஓமத் திராவகத்துடன் முற்கூறிய அபினி மாத்திரைகளைக் கலந்து 3 அல்லது 4 மணிக்கு ஒரு முறை உட்கொள்வதால் வலி முதலியவை வெகு துரிதமாகத் தணிவடையும். மூத்திராகாதம், மூத்ரக் ருச்சிரம் என்னும் வேறுவித மூத்திர நாளத்தில் சிறுநீர் அடைபடும் கோளாறுகளிலும் சிறிது ஆமணக்கெண்ணெயில் அபினித் திராவகத்தை (அஹிபேந ரஸக்ரியை)ப் போல் அதி சீக்கிரத்தில் வலியைத் தீர்க்கும் வேறு ஔஷதம் அரிது.

மதுமேஹம் என்னும் நீர் ரோகத்தில் இச்சரக்கு சேர்ந்த மது தமநம் என்னும் மாத்திரையை உட்கொண்டு வருவதால் நீரில் உள்ள சர்க்கரை குறைந்து, அடிக்கடி நீர் இறங்குவதும் தணிவடையும். ருதுசூலையென்னும் மாதவிடாய் காலங்களில் உண்டாகும் வயிற்று நோவுக்கு அசோகாரிஷ்டத்துடன் அபினித் திரவம் சிறிது கலந்து உட்கொள்ளலாம். கர்ப்பஸ்ராவம் என்னும் கருவழிவு ஏற்படுபவருக்கு கற்பூரம் கலந்த முற்கூடிய அபினி மாத்திரையைக் கருவழிவு ஏற்பட்டவுடனேயே தடவைக்கு 2 அல்லது 3 மாத்திரையாக இரண்டு மணி நேரத்திற்கு ஒரு முறை உட்கொள்ளக் கொடுக்கலாம். அதி ஸாரம், முக்கியமாய் சீதபேதி இவற்றில் அபினி கலந்த கனஸார வடி என்னும் மாத்திரையும், மஹா ஜாதீ பலாதி சூர்ணமும் வெகு சிறந்த ஒளஷதங்கள்.

ஆமவாதம் என்னும் கீல்வாயு வீக்கம், வேறு வாத ரோகங்களால் காணும் நோவுகள் இடுப்பு வலி, கழுத்துப் பிடிப்பு, சுளுக்குகள் முதலியவற்றில் வலியையும் வீக்கத்தையும் தணிப்பதற்கு இச்சரக்கைப் பல வேறு வகையில் மேலுக்கும் உபயோகிக்கலாம். அபினி கலந்த பிரஸாரிணீ தைலத்தையாவது, விச்வவாதாரி தைலத்தையாவது மேலே பூசி அழுத்தித் தேய்க்கவேண்டும். அல்லது ஸுரதாருலேபம் என்னும் சூர்ணத்தில் பத்தில் ஒரு பங்கு அபினியைக்கூட்டி, ஜலம் விட்டுக் குழைத்துக் கொதிக்க வைத்து, வலியும் வீக்கமுமுள்ள அவ அவயவங்களின்மீது சூடாகவே லேபனம் (பற்று) போடுவதும் நலம். அர்சஸ் என்னும் மூலரோகத்தில் ஆஸநபாகம் வீக்கமும் வலியுமெடுத்து வருத்தந் தருகையில் அரிசி மாக்களியில் சிறிது அபினித் தூளையாவது அஹிபேநத்திரவத்தையாவது கலந்துபோட்டவிகையாக (போல்டீஸாக)க் கூட்டிக் கட்டுவதால் பெரிதும் குணம் ஏற்படும்.

முற்கூறியவை தவிர "கிரஹணீ கபாடரஸம்" என்கிற ஒளஷதம் வயிற்றுவலி, அதிஸாரம், வயிற்றுப்பொருமல் முதலிய பலவகை குடற் கோளாறுகளில் விசேஷமாக உபயோகிக்கப்படுகிறது. ஜலோதரம் என்னும் ரோகத்தில் ஏற்படும் கடுமையான வயிற்று வேதனையையும் அப்பொழுது காணும் அதிஸாரத்தையும் சமநம் செய்யக்கூடிய "துக்த்தவடி" என்னும் மாத்திரையிலும் அபினி முக்கியமான சரக்கு. ஜ்வராதிஸாரத்தில் பேதியையும் ஜ்வரத்தையும் ஒருமிக்க நிவாரணம் செய்யக்கூடியதான "சம்புநாத ரஸம்" என்னும் மற்றொரு வகை மாத்திரையிலும், அபினி முக்கியமாகச் சேர்ந்திருக்கிறது. புருஷ தாதுவை விருத்தி செய்யும் வ்ருஷ்யகுணம் பொருந்திய "ஆகார கரபாதி சூர்ணத்தி





லும்" முக்கியமாயுள்ள சரக்கு அபினியே.

அபினி சிறந்தஔஷதச்சரக்கு. ஆகிலும் அதை தாராளமாய் உபயோகிப்பது சரியல்ல. இச் சரக்கை உபயோகிக்கும்போது அடியில்வரும் முக்கிய அம்சங்கள் ஞாபகத்தில் இருக்கவேண்டும்.—

1. அபினியின் குணத்தைச் சிலர் சிறிதும் தாங்கமாட்டார்கள். இவர்களுக்கு மிகச் சொற்ப அபினியும் மஹத்தான நரம்புக் கிளர்ச்சியை யுண்டுபண்ணி, தலைவலி, வாந்தி முதலியவற்றிற்குக் காரணமாகும். அவர்களுக்கு இச்சரக்கைக் கொடுக்கவே கூடாது.

2. சிறுவர்களும் இளங் குழந்தைகளும் அபினியைத் தாளமாட்டார்கள். இரண்டு குன்றுமணியளவு அபினியும் அவர்களுக்குப் பிராணபயம் அளித்துவிடும்.

3. அபினி கருப்பையிலுள்ள சிசுவுக்கும் கெடுதி விளைவிப்பதாகத் தெரிவதால், கர்ப்பிணிகளுக்கு அவ்வித மருந்துகளைக் கொடுக்காமலிருப்பது நலம்.

4. அபினிப் பழக்கமுள்ள பிணியாளரின் சரீரத்தில் அபினி சேர்ந்த மருந்து எதிர்பார்க்கும் குணம் தருவது அரிது. அவர்களுக்கு அதிக அளவில் அவ்வித ஔஷதங்களைக் கொடுக்க வேண்டி வரும்.

5 அபினிவாஸனை பிடிக்காமல் அதை விழுங்கமுடியாதவர்களுக்கு, அதைக் கஞ்சியில் கலந்து, ஆஸன வழியாக வஸ்தி முறையில் (எனிமா) செலுத்த வேண்டும்.

அபினி, கஞ்ஜா இவ்விரண்டும் கொடிய விஷச் சரக்குகளாயிருந்தும், இந்தியாவிலும், விசேஷமாகச் சீன தேசத்திலும், மதுபானத்தைப்போல் மனதுக்கு மதத்தை யுண்டுபண்ணிக் கொள்ள விரும்பி அவற்றை லாகிரி வஸ்துக்களாக உபயோகிக்கும் பழக்கமுள்ள ஜனங்கள் ஆயிரக்கணக்காயுண்டு. இப் பழக்கம் உடல் வன்மையையும், மனதையும், பொதுவாக நற்குணங்களையும் சீரழிக்கின்றன. அதற்குள்ள சில ஔஷத குணங்களைக்கொண்டு வைத்திய முறையில் மாத்திரம் அதைச் சிறந்த வஸ்துவாகக் கருதலாமேயன்றி வேறுவகையில் அதை உபயோகிக்காமலிருப்பதுதான் நலம்.

## அட்டைப் படம்

★

"தோட்டத்திலே, மரக்கூட்டத்திலே" செழித்த நாடு நம் நாடு. பசுமை மிகுந்த பகுதிகள் பல. எங்கும் பச்சைப்பசேலென்று காண்போர் களிகொள்ளும் வகையில் தோட்டங்களும் துறவுகளும் செறிந்த நாடு இது. அட்டையை அலங்கரிக்கும் படமும் அக்காக்ஷியைக் குறிப்பதுதான். சென்னையில் அடையாறுக்குப் போகும் மார்க்கத்திலுள்ள தோட்டத்தின் தோற்றம்.



நார்மண்டிப் போர் முனையிலே நேசப்படைகள் இறக்கிய யுத்த தளவாடங்களுக்குக் கங்குகரை கிடையாது. அங்கு "ரைனே" என்ற யு. எஸ். சிறு கப்பல்களிலிருந்து இறக்கப்படும் தளவாடங்களின் காட்சி.



(இடது)

ஒரு வருஷ காலத்தில் பிரிட்டிஷ் பாங்குகள் 500 கோடி பவுன் மதிப்புக்குச் சுமார் 450,000,000 செக்குகளுக்குப் பட்டுவாடாச் செய்திருக்கின்றன. லண்டன் 'கிளியரிங்' ஹவுஸில் வந்து குவிந்த 'செக்குகளை சரிப்படுத்தி ஒழுங்குபடுத்துவதைக் காட்டும் படம்.

இத்தாலிப் போர் முனைக்குச் சமீபத்தில் ஜார்ஜ் மன்னர் விஜயம் செய்திருந்தார். அங்கு அவருக்குச் சிறிது தூரத்தில் நாஸிகளின் சுரங்க வெடிகுண்டொன்று வெடித்ததாகச் சென்றவாரம் செய்தி வெளியாயிற்று. ஜார்ஜ் மன்னரும் ஜெனரல் அலக்ஸாண்டரும் இத்தாலியில் ஒரு விமான கூடப் பகுதியை பார்வையிட்டனர்.

(ரேடியோ படம்.)



# சுதேசமித்திரன்

(தினப்பதிப்பு)

## புதிய சந்தா விகிதங்கள்

(ஞாயிறு அனுபந்தம் உள்பட)

| சென்னையிலும், ஏஜண்டுகள் உள்ள இடங்களிலும் | | வெளியூர்களுக்கு தபால் மூலம் | |
|---|---|---|---|
| 1 மாதம் | 1-14-0 | 1 மாதம் | 2—2—0 |
| 3 ,, | 5—8—0 | 3 ,, | 6—4—0 |
| 6 ,, | 11—0—0 | 6 ,, | 12—4—0 |
| 1 வருஷம் | 22—0—0 | 1 வருஷம் | 24—0—0 |

தனிப்பிரதி விலை 1 அணா

(சந்தாத் தொகையை முன்பணமாகச் செலுத்தவேண்டும்)

அட்வான்ஸ் சந்தா செலுத்திய சந்தாதாரர்களின் கணக்கு புதிய விகிதப்படி மாற்றிக் கொள்ளப்படும்.

தற்சமயம் சர்க்கார் நிர்ணயித்திருக்கும் அளவுக்கு மேல் காப்பிகள் அச்சிடுவதற்கில்லை. ஆதலால், நேரில் ஆபீஸிலாவது அல்லது எமது ஏஜண்டுகளிடமாவது சந்தா செலுத்தி சந்தாதாரராக பதிவு செய்து கொள்ளும்படி நேயர்களைக் கேட்டுக் கொள்ளுகிறோம்.

மானேஜர்,

சுதேசமித்திரன் ஆபீஸ், சென்னை.

Printed and Published by T. S. Visvanatha Iyer, B. A., at the "Swadesamitran" Power Press, Mount Road, Madras.—*Editor*: C. R. Srinivasan, B. A